உ

சிவமயம்

பரமார்த்த தீபம்

என்னும்

# குருவாசகக் கோவை

பாரத்வாஜி

## முகவைக் கண்ண முருகனார்

இயற்றியது





ஸ்ரீ ரமணபாதானந்தரால்
வெளியிடப்பெற்றது

பிரமாதி வருஷம், ஆனி மாதம்

1939

சிவமயம்

# உள்ளுறை

உ

சிவமயம்

# நான்முகம்

"ஓர்த்துள்ள முள்ள துணிரி னொருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு."

—தேவர்

"உடம்பினு லாய பயனுவ தெல்லாம்
உடம்பினு ளுத்தமனைக் காண்."

—மூதாட்டியார்

உண்மைப் பொருளே பொருள். 'உள்ளது' எனும் சப்தத்தால் அது சூசனையாகக் குறிக்கப்படுகின்றது. உண்மையே, அதாவது கேவல இருப்பு மாத்திரமே அதற்குச் சொரூபம். அப் பரம்பொருளைச் சாட்சாத் கரிக்கு மிடம் உள்ளக்கோயி லென்பது ஆன்ரோர் மரபு.

உள்ளத்தின்கண் உள்ளதாக ஒளிவிடும் அம்மெய்ப் பொருளின் சேர்க்கையாலன்றி உயிர்க்கு விடுதலையின் றென்பது ஒருதலை. உய்ய வேண்டுவோர்க்கு நேர்சாதனம் ஸ்வஸ்வரூப லக்ஷ்யமே.

சர்வ அநர்த்தங்களுக்கும் சகல துக்கங்களுக்கும் மனமே காரணம். மனம் எந்த விடத்தில் எந்தச் சொரூபத்தில் யாருடைய அதீனத்தில் விளங்கினும் சரியே, அதன் உருவம் நாசமாகாதவரை உண்மைப்பேறும் உபசாந்தப் பிராப்தியும் பூரணமாகச் சித்திப்பதில்லை. உபநிடதகால முதல் உலகில் ஏற்பட்டுள்ள, கோடிக்கணக்கான சுருதிகளில் சன்மார்க்கத்தின் பெயரால் கோஷிக்கப்படும் எண்ணிறந்த சாதனங்களுட் பெரும்பான்மையும் மனக்கற்பனையிலேயே

தொடங்குகின்றன. ஏற்கெனவே பன்னெடுங்காலமாக அகத்தும் புறத்தும் வியாபித்துள்ள இந்த மனத்தின் மாயா விலாசமான கற்பனுலகங்களிற் கிடந்துழன்று வறட்சியாற் சோர்ந்து மனத்தின் சேர்க்கையில் விரக்தியுற்ற பக்குவ ஜீவர்களுக்கு அம்மார்க்கத்தின் பெயரால் அளிக்கப்படும் அத்தகைய கற்பனுலக்ஷ்யங்களிற் போதிய ஊக்கமும் உற்சாகமும் உண்டாவதில்லை. சாதகருடைய மனோபீஷ்டத்தை எளிதிலும் விரைவிலும் அநுபவத்திலும் நிறைவேற்றும் ஆற்றல் கற்பனுசக்திக்கு இன்மையே அதற்குக் காரணம்.

ஸ்ரீ பகவான்து உபதேசமோ ஆரம்பத்திலேயே மனதை, அதன் மூலத்தில் இயல்பாகவே ஒடுங்கி உருவழியச் செய்துவிடுகின்றது. இதனல், சாதகர்க்குக் கணந்தோறும் பிரத்தியக்ஷமான பரிபாகநலனும் முயற்சியில் அநாயாசமும் ஏற்படுகின்றன. மேலும், இந்த உண்மைச் செந்நெறியில் ஆராய்ச்சி, அநுசந்தானம், அநுபவமாகிய சாதனக்கிரமங்கள் யாவும் சம்பந்தத்தால் ஒன்றுபட்டு ஒரே காலத்தில் ஒரே இடத்திற் சித்திக்கின்றன. சந்தேக விபரீதப் பேய்களுக்கு இங்கே இட மேற்படுவதில்லை. பொருள், இடம், காலமாதிய தடைகளும் எதிர்ப்படுவதில்லை. இத் துறையிற் புகுந்த வொருவன் ஆரம்பத்திலேயே சகல விதிவிலக்குக் கட்டுக்களினின்றுங்கூட விடுதலை பெற்றுவிடுகிறுனென்பது மிகையும் உபசாரமும் ஆகாது. புனிதமான இந்த ப்ரஹ்மாநுசந்தானத்தில் கற்பனையென்பது சொல்லளவிலும் இல்லை. அதிகாரபேதமும் இதற்கு வேண்டப்படுவதில்லை. வேண்டுவ தெல்லாம் சித்தோபசாந்தம் அடைவதி லுள்ள விருப்பமொன்றே. இதுவே அருணசல பகவான் ஸ்ரீ ரமண மஹர்ஷிகளது தரிசனமாகும்.

ஸ்ரீபகவானை, பகவான் என்று சொல்லோடு நிறுத்திக் கொள்வதே பொருத்தமாம்.

"இருந்ததனை இருந்தபடி இருந்து காட்"டுவதே ஸ்ரீ பகவான் பக்தர்களுக்குச் செய்யும் அநுக்ரக சம்பிரதாயம். எனினும்,—

"பேதித்த சமயமோ வொன்றுசொன படியொன்று
பேசாது துறவாகியே
பேசாத பெரியோர்க ணிருவிகற் பத்தினுற்
பேசார்கள் பரமகுருவாய்ப்
போதிக்கு மூக்கணிறை நேர்மையாய்க் கைக்கொண்டு
போதிப்ப தாச்சறிவிலே
போக்குவர வறவின்ப நீக்கமற வசனமாப்
போதிப்ப தெவரையனே"

என்னும் ஸ்ரீ தாயுமானவர் பிரார்த்தனைக் கிணங்க, ஸ்ரீ பகவான் திருவுள்ளத்தினின்றும் இயல்பாகவே, பிரவாகம் போல் இடைவிடாது நிகழும், தத்துவாதீதமான அநுக்ரக ரகசியத்தை அறியும் ஆற்றலற்ற எம்போன்ற சிலர், உண்மைப்பொருளின் சொரூபத்தையும் அதனைச் சேரும் உபாயங்களையும் சப்தரூபத்தில் தங்களுக்கு அருளிச்செய்யுமாறு பிரார்த்திப்பதுண்டு.

"கருமம், பக்தி, யோகம், ஞானமாகிய சன்மார்க்க சாதனங்களனைத்தும் சத்தாமாத்திர சொரூபத்தையே தமக்குக் குறிக்கோளாக வுடையன. மார்க்கம் பலவாயினும் முடிவொன்றே. சாதனங்களில் ஏற்றத் தாழ்வுகளுக்கு இடமில்லை. ஏனெனில் கருமம், உபாசனை, யோகம், ஞானம் முதலிய சாதனக்கருவிகளில் ஒவ்வொன்றும் ஒவ்வொரு கர்த்தாவை ஆச்ரயித்தே யுள்ளது. கர்த்தா கருவிகளைக் கைக்கொள்ளுமுன் தன்னை இன்னனென்று தெரிந்து

கொள்ளவேண்டுவது அவசியமும் அறிவுடைமையு மாகும். ஆகவே, கருமத்தில் கர்த்தாவையும், உபாசனையில் உபாசகனையும், யோகத்தில் யோகியையும், விசாரத்தில் விசாரிப்போனையும் தனித்தனி 'யார்', 'யார்' என்று விசாரிக்குமிடத்துக் கிடைக்கும் பதில் "நான்' என்னும் ஒன்றே தான். அந்த 'நான் யார்' என்னும் ஆன்மவிசாரந்தான் எல்லா மார்க்கங்களிலும் உயிர்நாடியாய் ஊடுருவிக் கிடக்கின்றது. ஆதலால், யார் எந்த மார்க்கத்தைப் பற்றினும் பலன் ஸ்வஸ்வரூபப் பிராப்தியே. இவ்வழியில் தன்னை விசாரிக்க முயன்ற புருஷன் விசார ஆரம்பத்திலேயே, பரிபூரணமான பரமார்த்த சொரூபத்தை அபரோக்ஷமாகப் பெற்று விடுகின்றான். பின்னர் அவன் செய்யும் தவமனைத்துக்கும் ஸ்வஸ்வரூபத்தினின்று நழுவா திருத்தலே பயனும்."

ஸ்ரீபகவான் பல சமயங்களில் பல அடியார்களுடைய சந்தேகங்களை மேலே கூறியன போன்ற பல உபதேச வாக்கியங்களால் விளக்குவது வழக்கம். கேள்விகள் எந்த நிலையில், எந்த விடயத்தில், எந்த மனப்பான்மையில் எழுந்தனவாயினும் கிடைக்கும் பதில்மாத்திரம் அவ்வெல்லாவற்றுக்கும் மூலமான தன் உண்மைநிலையிற் கொண்டு சேர்ப்பதாகவே முடியும். இது நேரிற் கண்டறிந்தோர்க்குப் புதிதன்று.

இந்நூலில் வரும் ஒவ்வொரு பொருளும் வெவ்வேறு காலங்களில் வெவ்வேறு பக்தர்களின் உள்ளத்தினின் றெழுந்த ஐயப்பாடுகளை நிவிருத்திக்கத் தோன்றிய ஸ்ரீபகவானது கருத்தேயாகும். இதனை யாத்த பெரியார், தாம், சரீரத்தைச் சர்மையென்பப் பெரும்பாலும் ஸ்ரீபகவானது

சந்நிதியை நீங்காது உடனுறையும் பாக்கியம் வாய்க்கப் பெற்றவர். மணிகளிற் சரடுபோன்று எல்லோருடைய ஹிருதயங்களிலும் 'நான் நான்' என்று அநவரதம் ஜ்வலித்துக்கொண்டிருக்கும் நித்யாபரோக்ஷமான திருவருட்சக்தியே பக்தர்களது மனத்தைப் பற்றி யெரிக்கும் பரமார்த்த தாபத்தைத் தணிக்குங் கருணையுடன், அவ்வவர் பக்குவத்திற் கேற்ப, ஸ்ரீ பகவானது திருவாக்கையே தனது சொரூபமாகக் கொண்டு தனது அநுக்ரகச்செயலை நிகழ்த்துகிறதென்னும் திருவருளநுக்ரக வியல்புணர்ந்த புருடோத்தமர். வியட்டி முதலிய உபாதிகளையும், தன்மையாதிய இடங்களையும், கர்த்ருத்வ முதலான ஜீவபோதங்களையும் கடந்த பாரமார்த்திக நிலையினின்று, நிமித்தகாரணமாத்திரமாகவே கிளம்பும் பரிசுத்தமான அசரீரி வாக்குக்களே ஸ்ரீ பகவானுடைய திருவருட்குறிப்புக்களென்னும் உண்மை யுபதேசவியல்பை ஸ்வாநுபவரூபமாக உணர்ந்த மெய்யறிஞர். ஆகவே, ஒப்பற்ற அவ் வருள்வாக்குக்கள் நித்யத்வம் பெற்று, எல்லாக் காலத்தும் எல்லாவிடத்தும் எல்லா ஹிருதயங்களையும் பிரகாசிப்பித்துக்கொண்டிருக்கும் மெய்ஞ்ஞான ரவிகிரணங்களாக விளங்கவேண்டுமென்னும் தூய அவாவினர். ஸ்ரீ பகவானுடைய உபதேசப்பொருள்களின் அருமை, உயர்வு, பிரயோசனங்களை நன்கறிந்தவர். ஆகவே, ஸ்ரீ பகவானது ஹிருதயத்தினின்று உபதேசவாக்கிய வடிவிற் றோன்றிச் சுடர்விட்டொளிரும் செம்பொருட் கதிர்மணிகளைக் கூடுமானவரையிற் கைப்பற்றி அவ்வப்போதே பைந்தமிழ்ச் செய்யுட் பெட்டகத்திற் சேமித்து வந்தனர். அக் காரணத்தால் இந்நூல் ஓர் ஆசிரியரால், ஒரு காலத்தில் ஒரு நோக்கம்பற்றி அதற்குரிய சாதனங்களோடும் கர்த்ருத்வபாவத்தோடும் நெறிமுறையில் எழுந்ததன்றென்பது

போதரும். தவிர, இந்நூலின் பகுப்புக்கள் நான்முறை பற்றி ஒருவாறு பாகுபாடுசெய்து அமைக்கப்பெற்றுள்ளன வேயன்றி பொருண்முறைபற்றி யல்ல. பல செய்யுட்கள் ஒரே கருத்தினவாயும், ஒரு பகுப்பின் பொருளே பிற பகுப்புக்களின் பொருளாயும் சிற்சில விடங்களிற் றோன்றுதற்குக் காரணமும் அதுவே. ஆதலால், இந்நூலில் வரும் ஒவ்வொரு செய்யுளின் முழுக்கருத்தையும் நன்கு தெரிந்து கொள்ள விரும்புவோர், ஆரம்பத்திலேயே அதனதன் அதிகார சம்பந்தத்தினின்று அதனை நீக்கித் தனிச் செய்யுட்பாவத்தோடு பொருள் நாடலே ஏற்புடைத்தாகும்.

ஆசிரியரான ஸ்ரீ பாரத்வாஜி முகவைக் கண்ண முருகனார் தாம் கல்வி, கேள்வி, அறிவு, ஆன்மாநுபவமாதிய தெய்வ சம்பத்துக்கள் பூரணமாக வாய்க்கப்பெற்றவ ரென்பதை இந்நூலே புலப்படுத்தும்.

சுருங்கக்கூறின், ஸ்ரீ ரமண சித்தாந்தத்தையும் அதன் சொரூபத்தையும் இயல்வடிவிலேயே விரிவாக விளக்கப் போந்த நூல் இதுவே எனலாம்.

தம்மளவில் நிரங்குச த்ருப்தியுற்று அறிதுயில்கொள்ள விரும்பாது கருணைப் பெருக்கால் உலகையும் உய்விக்கும் திருநோக்குடன் ஸ்ரீ பகவானது பொன்னேபோன்ற அருண் மொழிகளை நூல்வடிவிற் றொகுத்துதவிய ஸ்ரீ முருகனாரது உதவிக்கும், அதனை வெளிப்படுத்தற்கான சகல பிரயத்தனங் களையும் தாமே மேற்கொண்டு செய்து முடித்த பரிசுத்தத் தியாக சீலரான ஸ்ரீ ரமண பாதானந்த ஸ்வாமிகளது செம் பணிக்கும் உலகம் பெரிதும் கடமைப்பட்டுள்ளது.

விழுப்புரம்,
1-6-1939

இங்ஙனம்,
**நடனானந்தன்**



உ

சிவமயம்

# சிறப்புப் பாயிரம்

## விழுப்புரம்

## ஸ்ரீ நடனானந்தர் இயற்றியது

(நேரிசை வெண்பா)

1. அருணை ரமண னருள்விழிகொண் டுண்மைத்
தெரிவாம் பரம்பொருளைச் சேர்ந்து—முருகன்
பரமார்த்த தீபப் பரிசா லுலகைப்
பரமார்த்தஞ் சேர்த்தான் பரிந்து.

2. உள்ள பொருளே பொருளா வுணர்வதூஉம்
உள்ளத்தி னீங்கா துறைவதூஉம்—கள்ளந்
திருந்துகர ணங்களெலாஞ் சேட்டித்துந் தானப்
பொருந்துவதூஉ மிந்நூற் பொருள்.



ராவ்பஹதூர்

## வ. சு. செங்கல்வராயபிள்ளையவர்கள், எம். ஏ.,

*(Retired Personal Assistant*

*to the Inspector-General of Registration)*

உதவியது

---

### (நேரிசை வெண்பா)

1. யானேக்குங் காலைநில னென்ற திருக்குறளை
மேனேக்க மெய்ப்பொருளை மேதினியோர்—தாநோக்கி
உண்மை யுணரவெடுத் தோதுதிறல்* வித்தகன்காண்
கண்ண முகவைமுரு கன்.

2. முகவையூர்க் கண்ண முருகனர் சொற்றூர்
பகவனு ருண்மைப் பரிசைச்—சகவிருளைத்
தீர்க்கும் பரமார்த்த தீப விளக்கத்தால்
யார்க்கு மிடர்நீங்க வே.

3. குருவா சகங்களெலாங் கோவைபடச் சேர்த்திங்
கொருவா சகமா வுரைத்த—திருவா!
முகவை முருக முனியே யுனது
தகவைப் புகழுஞ் சகம்.



---

* இது குருவாசகக்கோவை 434-ஆம் செய்யுளைக் குறிக்கின்றது.

# பதிப்புரை

என்ன புண்ணியஞ் செய்தனை நெஞ்சமே! அடிமை செய்த நல்வினையோ, அடிமையின் முன்னோர் செய்த நல்வினையோ, அண்ணாமலைப் பெருமான் ஸ்ரீ ரமணதேவரின் திருவடிக்கு அடிமையை ஆட்படுத்திச் செய்தது; அன்றியும், அத்தேவரின் உண்மை நிலையுணர் முகவை முருக முனிவர் திருவாய் மலர்ந்த, திருவாசகம் திருக்கோவையார் போன்ற ஸ்ரீ ரமண சந்நிதி முறை குருவாசகக்கோவை என்னும் பொருள்செறி நூல்கள் பூவுலகில் நிலவுறுதல் வேண்டும், அன்பர்கள் அந்நூல்களைப் படித்துணர்ந்து ஆன்மசுத்தி அடைதல் வேண்டும் என்னும் ஓர் அவா அடக்க முடியா வகையில் அடிமை மனத்தில் எழச் செய்தது; அடிமையைக் கருவியாகக் கொண்டு எடுத்த காரியத்தை இனிமையாகப் பூர்த்தியும் செய்வித்தது. என்னே இறைவன் திருவருள் வேகம் இருந்தவாறு! ஆஹா! நிகழ்வனவெல்லாம்

> "என்னிச்சை யோவருணை யீசா படைத்தளிக்கும்
> உன்னிச்சை யன்றோ வுரை"

என்னும் பெரியார் வாக்கு, கையிலங்கு பொற்கிண்ணம் போலத் திகழ்ந்து புலப்படுகின்றதே!

ஸ்ரீ ரமண சந்நிதிமுறையின் இரண்டாம் பதிப்பையே யன்றிப் பரமார்த்ததீபம் என்னும் இக்குருவாசகக்கோவையையும் உலகுக்கு வெளிப்படுத்த வேண்டும் என்று அடிமை கொண்ட எண்ணத்தை நிறைவேற்ற, அவ்வெண்ணத்தைத் தந்த இறைவனே அடிமைக்கு நால்வர் துணையை உதவினர். அந்நால்வராவார்:—

விழுப்புரம் ஸ்ரீ நடனானந்த சுவாமிகள்:—இவர் தவப் பெரியார்; சாந்தசீலர்; இந்நூலாசிரியரொடு பெரிதும்

பழகினவர்: இந்நூலின் சிறப்புப் பொருளைச் செவ்வனே அநுபவித்தவர். இந்நூலின்வகுப்புக்களை முறைப்படுத்தின பொழுது உதவிய உண்மையாளர்.

ராவ்பஹதூர், ஸ்ரீ வ. சு. செங்கல்வராய பிள்ளையவர்கள், எம்.ஏ.:—இவர் நற்றவச் சீலர். இந்நூலாசிரியரிடம் மிகவும் அன்பு பூண்டவர். ஸ்ரீ ரமண சந்நிதிமுறை இரண்டு பதிப்புகளுக்கும் உதவியவர். இந்த நூலின் வெளியீட்டிலும் உதவி புரிந்தவர். தமிழிற் பேரன்பும் ஆர்வமும் உள்ளவர்.

வித்வான் ஸ்ரீ கி. வா. ஜகந்நாதையர் அவர்கள் (துணையாசிரியர் - கலைமகள்):—கல்வி யறிவிற் சிறந்தவர். ஸ்ரீ ரமண சந்நிதிமுறையின் இரண்டாம் பதிப்பு அச்சிடுவதிலும், இந்நூல் ஒழுங்குபெற அச்சேறுவதிலும் பெரிதும் உழைத்த வித்தகச் செல்வர்.

வித்வான் ஸ்ரீ மோ. ஸ்ரீ. செல்லமையர் அவர்கள், B.O.L. (கலவல-கண்ணன் செட்டியார் கலாசாலைத் தலைமைத் தமிழாசிரியர், பேரம்பூர்): — இக் குருவாசகக்கோவைப் பதிப்பு வெளியீட்டில் உதவி புரிந்த உயர்குணச் செல்வர்.

இந்நால்வருக்கும், இந்நூலை விரைவாகவும் அழகிய வகையிலும் அச்சிட்டுதவிய "சென்னை லா ஜர்னல்" அச்சுக்கூடத் தலைவர் - பிரம்மஸ்ரீ ஆர். நாராயணசாமி ஐயர், பி. ஏ., பி. எல்., அவர்களுக்கும், மற்றும், இந்நூல் வெளியீட்டுக்கு வேண்டிய உதவி செய்த பிற அன்பர்களுக்கும் அடிமையை ஆளும் ஸ்ரீ ரமண தேவரின் கிருபா கடாக்ஷம் மேன்மேலும் பெருகுக, பெருகுக, பெருகுக என மும்முறை பிரார்த்திப்பதன்றி, அடிமை வேறு எவ்வகைக் கைம்மாறு செய்யக் கூடும்!

சென்னை,
19-6-1939.

அடிமை - ஸ்ரீ ரமண பாதானந்தா

உ

சிவமயம்




## சமரச சன்மார்க்கம்

உதித்த விடத்தி லொடுங்கி யிருத்தல்
அதுகன்மம் பத்தியு முந்தீபற
அதுயோக ஞானமு முந்தீபற.

வினையும் விபத்தி வியோகமஞ் ஞானம்
இனையவையார்க் கென்றாய்ந் திடலே—
வினைபத்தி
யோகமுணர் வாய்ந்திடநா னின்றியவை
யென்றுமில்தான்
ஆகமன லேயுண்மை யாம்.

—பகவான்



உ

சிவமயம்



## ஸ்ரீ அருணாசல தத்துவம்

புத்தியகங் காரம் புலம்பெய்த வோங்கும்
மத்தியித யந்தான் மறைபவனு மாலும்
நத்தவறி யாது நலங்குலைய வன்னார்
மத்தியொளி ரண்ணா மலையினது மெய்யே.

—ஆசிரியர்

## தீபதரிசன தத்துவம்

இத்தனுவே நானா மெனுமதியை நீத்தப்
புத்தியித யத்தே பொருந்தியக நோக்கால்
அத்துவித மாமெய் யகச்சுடர்காண் கைபூ
மத்தியெனு மண்ணா மலைச்சுடர்காண் மெய்யே.

—பகவான்

ஓம் தத் ஸத்

# பரமார்த்த தீபம்

என்னும்

# குருவாசகக்கோவை

## பாயிரம்

### க. நூற்பெயரும் தோற்றமும்

(நேரிசை வெண்பா)

தெளிந்த பரமார்த்த தீபமீ துண்மை
ஒளிர்ந்திடக்கா ணுத வுளத்தேன்—இளந்தை
அறிவாற் கொளுத்தியதன் றூண்டரம ணன்மூ
தறிவாற் கொளுத்திய தாம். க

—:o:—

### உ. நூற்பயன்

2. அனைத்துமாய் நின்றபர மான்மாவுக் கெய்தல்
எனைத்துமே யின்றா மெனவே—மனத்துத்
தருமார்த்த காமச் சலன்மறக் காண்டல்
பரமார்த்த தீபப் பயன். க

3. சுகசொருப மாகச் சுடருந்தன் மெய்யே
இகபரங்கட் கெல்லா மிடமாம்—தகவாற்
கதியெலா மெண்ணிக் கலங்காது தன்னிற்
பதிதலா மிந்நூற் பயன். உ

—:o:—

## ௩. அவையடக்கம்

4. சந்தக் குருவா சகக்கோவை தேருங்கால
மந்த மதியடைத்த மந்தனேன்—புந்தியால்
எண்ணி யிசைத்ததுவன் றெண்ணு திசைப்பித்தோன்
புண்ணியனும் வேங்கடவன் போன்ம். க

5. யானென்போ தத்தா லெழுதாக் கிளவிக்கு
யானே னியம்ப லவையடக்கம்—மோன
சமாதியா லுள்ளத்துட் சான்றோர்தே ரந்தப்
புமானதே யிந்நூற் பொறுப்பு. உ

———:o:———

## ௪. சமர்ப்பணம்

6. பேதுகடிந் தென்னையிப் பேறு பெறுவித்தாள்
ஆதலினன் றுக வடைவித்தேன்—சூதுவா
தேது மறியாத வீன்று டிருவுளத்துக்
கீது சமர்ப்பணமா கென்று.

———:o:———

## ௫. ஆக்கியோன்

7. குருவார்த்தை சிற்சிலவோர் கோவையாக் கோத்துப்
பரமார்த்த மாகப் பகர்ந்தான்—சருவார்த்த
வண்ணமுமவ் வாண்டான் வளர்கழலே யாகவருட்
கண்ணினிற்கா ணண்ணமுருகன்.



———:o:———

## முதலாவது

# தத்துவ ஆராய்ச்சியியல்

### மங்கலம்

(நேரிசை வெண்பா)

8. ஞானமயச் செம்பொருளாந் தன்மெய் யநுபவந்தான்
மோனமயப் பண்பான் முயங்குவதாய்—நானெனும்பொய்த்
தன்மையதன் மெய்யாய்த் தழைத்தோரிருஞ் சுத்தபரத்
தன்மயமாந் தாளே தலை. க

9. உள்ளுறவு கொண்டார்க் குவட்ட லுறு தார்வமெழும்
தெள்ளுபர மானந்தத் தீங்கனியாய்—உள்ளமுறத்
தூண்டா மணிவிளக்காய்த் தூங்காதே தூங்குமன்மை
ஆண்டா னருளே பெரருள். உ

—:o:—

### க. உலகுண்மைத்திறன்

10. காரணமே காரியமாக் கண்டலாற் சாத்திரங்கள்
பேருருவ மாத்திரமாப் பேசலுறும்—பேருலகக்
காரணமாஞ் சின்மயந்தான் கைந்நெறிமெய் யாதலினாற்
பேருலக மெய்யெனவே பேசு. க

11. ஈசன் படைப்பா மெதிரிற் புலப்படூஉம்
காசினிமெய் யாகக் கழிப்பார்க்குப்—பாச
மயற்கற் பனையா மனமாத் திரமே
துயக்கறுதன் மெய்த்துணிவுற் றோர்க்கு. உ.

12. சொச்சபர மான்ம சொரூபசத்தி லேம்புலமாம்
துச்சவுரு நாமசகத் தோற்றம்தச்—சச்சிற்
சொரூபம்திற் கற்பிதமாய்த் தோற்றமன மாயைத்
திருவிளையாட் டென்றே தெரி. ௩

13. இறைவனது திட்டியிலே யில்லா வுலகை
நிறைபடுமெய் யாக நிகழ்த்தார்—நிறைந்த
அறிவுருவாந் தன்னையலா லன்னியமா வொன்றை
அறியா வறிவி னவர். ௪

14. இவ்வுகாத் திட்டகிளி யென்றே புல்லும்
உலகுபொரு ளாக்காத் துழல்வோய்—உலகு
புலப்படலான் மட்டும் பொருளேற் பொருளாம்
புலப்படலாற் கானற் புனல். ௫

15. மாயா விகார மனப்புலத்துக் கல்லாலம்
மாயா விகார மனத்துக்குத்—தாய்கமா
நின்ற தனக்கு நிகழா திருக்குங்கால்
ஒன்றாமோ வுண்மை யுலகு. ௬

16. உலகத்துக் கஞ்சி யொடுங்குவீ ருள்ள
உலகத் தலமொன்று மில்லை—புலனுக்கும்
பொய்ச்சகத்துக் கஞ்சல் புரிகயிற்றிற் பொய்ப்பாம்புக்
கச்ச முறுத லனைத்து. ௭

17. சங்கற்பத் தோற்றமுள சாக்கிரத்துஞ் சொப்பனத்தும்
பங்கமற விவ்வுலகம் பார்ப்பதலாற்—சங்கற்பம்
கிஞ்சித்துந் தோற்றாத கேவலத்துக் காண்பதுண்டோ
சங்கற்பந் தானுலக சத்து. அ

18. சிந்தனையின் மாட்சியே தேற்று மூலகமெனிற்
சிந்தனையில் லாதனைத்திசேர்பொழுதும் — முந்தெனவே
சொற்பனம்போ லேனுமெதிர் தோன்றல்து முற்பட்ட
கற்பனையே கத்தாலே காண். கூ

19. வாயு விருந்தே வலைநூல் வெளிப்படுத்தி
வாயுளதை மீள வயப்படுக்கும் — மாயச்
சிலந்திபோ லிவ்வுலகைச் சிந்தையுந்தன் னுண்ணின்
றலர்ந்தே யகப்படுக்கு மால். க0

20. உந்தப் படுவ வுருப்பெயர்தா முண்ணின்றே
சிந்தைபொறி மூலவழிச் சேருங்கால் — சிந்தை
இதயத்தே தங்கி யிருக்குங்கான் மீளப்
புதைவனவாங் கேயவையுட் புக்கு. கக

21. செறியுங் கனசொருப திட்டியிலே யில்பொய்
யறிவின் சுழல்விட்ட மாகும் — அறிவின்
இலகுமவ் தானத் திருமையொடு மும்மை
உலகவிவ கார முணர். கஉ

22. நிகழ்ந்தவெறு ஞான நிறைவன்றி நின்றால்
முகந்துபுல னுமூலக் முற்றும் — அகந்தையொடு
வஞ்சக்கா மாதி மருவு மனோமயமாம்
மஞ்சட்கா மாலை மயக்கு. கங

23. ஞான வெயின்முன் னலிதலான் மஞ்சள்போற்
பானுவா மீசன் படைப்பன்று — பானசகம்
பீலிக்கண் ணோரும் பெருஞ்சித் திரஞ்சித்த
நீலிக்கண் ணாடி நிழல். கச

24. எல்லார்தம் புந்தியையு மேமாற்றஞ் செய்துழக்கும்
பொல்லாத விப்பெரும் பொய்யுலகு—புல்லாது
தன்னைத்தான் சோர்ந்த தவற்றாலே யன்றிமற்
றென்னத்தா லும்வந்த தின்று. கரு

25. வேட்கைவெறுப் பாதி விராய்நடக்கு மிவ்வுலக
வாழ்க்கைமயல் வந்த வறுங்கனா—தூக்கப்
பொழுதுண்மை போலப் புலப்பட்டு மெய்யா
விழித்தக் கடைவெறும் பொய். கசு

26. கயிற்றரவுங் குற்றிக்கட் கள்வனுமே யன்றி
மயற்றகைசேர் பேய்த்தேரு மானும்—இயற்கைத்தால்
உண்மையிலே யில்லா வுலகம் புலப்பாட்டால்
இன்மையிலே யுள்ள வியல்பு. கஎ

27. பொன்னிடத்துத் தோன்றிப் பொலியும் பலவணிபோற்
றன்னிடத்துத் தோன்றுஞ் சராசரங்கள்—தன்னைபொழிந்
தன்னியமோ வல்ல வவிரும் பல்வணியும்
பொன்னியலே யாமாறு போல். கஅ

28. ஆன்ம சொரூபத்தை யாச்சா தனஞ்செய்து
தோன்று முலகுகணுத் தோற்றமே—தோன்றுமுல
கான்ம சொரூபத்தா லாச்சா தனமெய்தின்
ஆன்ம சொரூபமே யாம். ககூ

29. புகையான்மூ டுண்டொளிர் தீப் போலே யுலகத்
தொகையான்மூ டுண்டொளிர்சிற் சோதித்—தகையாம்
திருவருளாற் சிந்தை தெளிந்தக்கான் மெய்யே
மருளுருவ மன்றுலக மாண்பு. உ0

30. அறிவுகளுக் கெல்லா மடிப்படையா மம்மெய்
யறிவுவிடார்க் கம்மியமே யாகும்—குறியதனால்
அன்னா ரவைகளுமெய் யாமென்னலே யவ்வறிவு
துன்னார் துணித லெவன். உக

31. உலகுணர்வொன் றேவத்தோ டொட்டா திருந் தானே
இலகுபர வுண்மையுணர் வேயும்—குலவி
மலவன்மை மாய்ந்தமன மாந்தரே மன்ற
உலகுண்மை யர்த்தமுணர் வோர். உஉ

32. ஞானமய மாகத்தன் னாட்டத்தை மாற்றிமெய்ஞ்
ஞானமய மானவந் நாட்டத்தாற்—றானடின்
வானமுத லைம்பூத வையகமு மெய்யாகும்
ஞானமயச் செம்பொருளா நாடு. உங

33. சேட்டையற வாற்சச் சிதானந்த மாத்திரந்த
நாட்டமுறக் கீனுமெய்ஞ் ஞானிக்கு—நாட்டமுறும்
கண்ணலாற் காட்சியிலாக் காரணத்தா லன்னதே
திண்ணமா யிவ்வுலகுந் தேர். உச

34. மனமாயை விஞ்சி வயங்குசச் சித்தாம்
கனமாய காட்சிக்கே காணும்—கனவின்
மயங்குநோக் காய மனோமாத் திரமாய்
இயங்குலகக் காட்சி யியல்பு. உரு

35. நின்மயமே யாக நிகழ்கனவைக் கண்டுநிதம்
மன்மயங்கு மாய மடநெஞ்சே—நின்மெய்ந்
நிறத்தைநீ காண்டியே லுண்மையறி வின்பப்
புறத்ததோ விந்தப் புவி. உசா

36. மண்டுபல வாக மயங்குமிப் பார்மூலக்
பண்டைநிலை பல்வண்ணப் பச்சைமயில்—அண்டரசம்
ஒன்றேபோ லென்று முறச்சுமா மிவ்வுண்மை
நின்றேபா ரான்ம நிலை. ௨எ

—:o:—

## உ. உலகமித்தைத்திறன்

37. நித்தியமன் றென்னினுங்கண் ணோர்புலனு மிவ்வுலகு
சத்தியமே யென்றுசிலர் சாதிப்பார்—நித்தியமா
மன்னனுமவ் வுண்மைக்கு வாய்த்தகுறி யேயன்றோ
என்னமறுக் கின்றே மியாம். க

38. கூறு படினுங் குலவுமுல குண்மையொடு
மாறுபடா தென்றுசிலர் வாதிப்பார்—கூறுபடாத்
தன்மையுமவ் வுண்மைக்குச் சார்ந்தகுறி தானன்றோ
என்னமறுக் கின்றே மியாம். உ

39. கால மெனுஞ்சக் கரத்தா லறுப்புண்ணும்
ஞாலம் பொருளென்னார் நல்லறிஞர்—கால
அதீதமொடு தேச வதீதமுமாம் மூன்ற
சதோதயமே மெய்ப்பொருளின் சால்பு. ௩

40. பொய்யாய மெய்யின் புலத்தா லறிபவெலாம்
பொய்யாமோ வன்றிப் புறமாமோ—மெய்யாக
உய்த்துணர்ந்து நோக்கி யுரையா யுலகியல்வாய்
எய்த்தொழிந்த நெஞ்சே யினி. ௪

—:o:—

## ௩. உலகமயுக்கத்திறன்

41. உலகா சரணைக் குவகையேர டாட்டின்
அலைதாடி யாவி ணவைவார்—நிலையான்ம
மோக்கவா சார முனிவார் திறனந்தோ
பார்க்கலா காப்பரிதா பம். ௧

42. கள்ளப் புலத்தைக் கருத்தா லுழூதிடர்ப்பட்
டெள்ளத் தனைமகிழ்வுக் கேங்குவார்—உள்ளலெழூம்
உள்ளப் புலத்தை யுணர்வா லுழூதுவினை
வெள்ளமகிழ் வேண்டார் வியப்பு. ௨

43. ஆன்மரவிக் கன்றே யறக்கிழத்தி யாவகத்துத்
தான்மருவுஞ் சீவமதித் தையலாள்—ஆன்மசுகம்
விட்டுலக போகம் விதும்பலருங் கற்புநிலை
கெட்டுமடம் பட்ட கிறக்கு. ௩

44. உலகின் மயற்கை யொழிந்தாலே யுண்மை
குலவுபர முத்திகை கூடும்—உலகுக்கு
வற்புறுத்தி யுண்மை வழங்கல் பரத்தைக்குக்
கற்புறுத்துங் காமக் கதழ். ௪

———:o:———

## ௪. உலகவறட்சித்திறன்

45. மித்தையா மேதினியை மெய்யென் றலமரூஉம்
பித்தரா லன்றிமெய் வித்தகராற்—சித்தாம்
பிரமத்தை யல்லாற் பிறிதோர் பொருளும்
இரமித்தற் கேற்ற தல். ௧

46. உண்மைப் பொருள்வழியே யுற்ற வுணர்வுடையோர்
எண்மை யுலகியல்வா யேகுவரோ—திண்மையிலாப்
புன்மை விலங்கின் புலவுணர்வே யன்றோவவ்
வின்மை யுலகத் திழிபு. உ

47. உலகின் மருவுபொரு ளொன்றிலே தானும்
இலகு சுகமென்ப தில்லை—உலகப்
பொருள்களினின் றின்பம் புணர்வதா வெண்ணி
மருள்வதெவன் மூட மனம். ங

—:o:—

## ரு. உலகநடைத்திறன்

48. இனைத்தெனத்தன் னுண்மைதெளிந் தேய்ந்திதயத் தென்றும்
தனித்தபர மாகத் தரித்தே—மனித்தனென
வேடத்துக் கேற்ப விளையாடு வாருலகத்
தோடொத்துத் துக்கசுக முற்று. சு

49. தேர்வதெல்லாந் தேர்ந்துசித்தி சேர்ந்தாலும் வேற்றுநடை
சார்வதுசான் றோர்க்குத் தகவன்றும்—ஆவதனால்
எவ்வினத்தோ டேநீ யியல்வைவெளிக் கவ்வினத்தோ
டொவ்வுறுமாப் போலே யொழுகு. உ

—:o:—

## சா. விவர்த்தசித்தாந்தத்திறன்

50. நாமுலக மென்ன நயந்துரைத்த தாலுயிர்கட்
காமுறுதி யோதுரம ஞைசிரியர்—சேம
விவர்த்தசித் தாந்தமே மெய்யாக விண்டார்
தவிர்த்துப் பிறவற்றைத் தாம். க

51. நானு விதமான நானுரூபங்களொடு
தானே யுலகாச் சமைவதலாற்—றானோர்
நிமித்தனா யத்தை நிருமித் தளித்துச்
சமித்தல் புரிவா னலன். ௨

52. தானே யுலகாச் சமைந்துள்ள தத்துவத்தைத்
தானே யறியாத் தடுமாற்றம்—ஏனோதான்
ஏய்ந்ததெனக் கேளார்தீர் யார்க்கெனநீர் காண்பீரேல்
ஏய்ந்ததடு மாற்றமே யில். ௩

53. தானே யுலகாச் சமைதலெனி னோர்பழுதை
தானே யரவாச் சமைதலாம்—கானுங்கால்
சர்ப்பமே யில்லையெனிற் றான்சமைந்தாற் போலுலக
உற்பவமோர் காலு மிலை. ௪

54. அங்கினையே யல்லால்வே றுகா வரவுருவை
அங்கினையே யல்லவோ வாயுங்கால்—அங்கியமாம்
தாம்பிற் பிறப்பித்துத் தன்றுயிர்க்குக் காரணமாய்
ஓம்பி யொடுக்கு வது. ௫

55. அறிவாய வுண்மையே யான்மா வுலகவ்
வறிவாம் புடைபெயர்ச்சி யாமே—அறிவாக
மேவினு லோர்பழுதை வேண்டுமோ வங்கியமா
யாவனையும் பாம்பா யிடற்கு. ௬

56. சத்தா மியல்பேர்ச் சலித்ததோ வான்மாமற்
றெத்தா லியைந்ததெனி னிவ்வுலகம்—மித்தையாம்
அஞ்ஞானத் தாலே யடைந்ததலா லான்மாவுக்
கெஞ்ஞான்று மோர்சலன மின்று. ௭

57. பின்னைப் படாவிசும்பு பேணுங்காற் காரியமாம்
பின்னத் தசும்பே பிறங்கர்தேற்—பின்னைத்
தசும்பசைவு கொண்டு தசும்புதனி லுற்ற
விசும்பசைவு கூறன் மிகை. அ

58. ஆன்மநின்ற வின்க ணநான்ம வுடலுலக
ஊனமொரு காலுமொளிராதேல்—ஊனமுறல்
ஆய வவற்றசைவா லான்மா தனக்குமசை
வாயதெனக் கூறலறி வன்று. கூ

59. ஆன்றபரி பூன்றவச லான்மா மனோபாதி
என்றசலத் தாற்சலித்தா லேய்ந்திடினும்—தோன்றும்
நிழலுயிருக் கன்றி நிசபரமான் மாவுக்
குழல்வென்று மில்லை யுணர். கo

60. அத்துவித மாயபர மான்மா தனக்குமயற்
சித்த வுபாதியெங்ஙன் சேர்ந்ததெனின்—மத்தவுயிர்த்
திட்டியாற் சேர்ந்ததலாற் சித்துக் குபாதிமெய்யா
ஒட்டியதே யில்லை யுணர். கக

61. மயலாக்கத் தாலே மனமருண்டு நோக்கும்
அயனேக்கி னன்றிமெய் யான்ம—வியனேக்கிற்
றேகமே யின்றேற் சிதாகாய வான்மாவைத்
தேகியெனச் சாற்றல் செயிர். கஉ

62. சரீரமே நானச் சரித்தாலே யன்றிச்
சராசரமா மன்னியஞ்சா ராதேல்—பராபரமாத்
தோன்று மயல்விடய சூனியத்தா லான்மாதான்
ஏன்றகரி யென்ற விழுக்கு. கங

(இன்னிசை வெண்பா)

63. உடலொழிந் தில்லை யுலகம்—உடலும்
உளமொழிந் தோர்கா லுமில்லை—உளமும்
உணர்வொழிந் தோர்கா லுமில்லை—உணர்வேயும்
உண்மையொழிந் தோர்கா லுமில். கச

———:o:———

## எ. அஜாதசித்தாந்தத்திறன்

(நேரிசை வெண்பா)

64. அநேகசித் தாந்த மவரவர்க் கேற்பச்
சொனாலுங் குருரமணத் தோன்றல்—தன்து
நிஜானுபவ மாக நிகழ்த்தயாங் கேட்ட
தஜாதசித் தாந்த மறி. க

65. அர்ச்சுனற்குக் கண்ணபிரானாதிக்கட் சொற்றதூஉம்
உச்சமுறு மிந்தநிலை யுண்மையே—அர்ச்சுனன்றன்
சிந்தைகொள மாட்டாத் தியக்கத்தாற் காண்டியதன்
பிந்தி யுரைத்தான் பிற. உ

———:o:———

## அ. படைப்புடன்பாட்டுத்திறன்

66. சிட்டிமுறை பற்பலஃ றிறத்தாலே சாத்திரங்கள்
கட்டுரைக்கு மந்தக் கருத்திதுவாம்—சிட்டிமுறை
ஓதலன்று சாத்திரத்தி னுள்ளமுதன் மூலவுண்மை
ஆய்தலொன்றே யந்நூ லகம்.

———:o:———

## ௯. இறைதொழிற்றிறன்

67. கருத்தொன்று மின்றிவான் கண்ணே யெழுந்த
அருக்கன்றன் முன்னிலைமட் டாலே—வருக்கமுறு
சேதன சேதனங்கள் சேட்டித்த லாகுமந்
நாதனால் யாவு நடை. க

68. கக்குவதூஉஞ் செங்கனலைக் காந்தக்கல் கஞ்சத்
தொக்குண் மலர்ந்தாம்பன் மூடுவதூஉம்—மிக்க
அகிலவுயிர் சேட்டித் தடங்குவதூஉ மென்றாழ்
திகழ்சந் நிதிமாத் திரம். உ

69. காந்தமுன் னூசி கலங்குவதூஉந் திங்கண்முற்
காந்தச் சிலைதண்ணீர் கால்வதூஉம்—வாய்ந்த
குமுதமலர்ந் தம்புயந்தான் கூம்புவதூஉ மிக்க
சமுகவியல் பாற்றுந் தரம். ௩

70. கருத்தனுவு மில்லாக் கருத்தனது முன்னே
உருத்ததொழிற் குள்ளா முயிர்தாம்—பொருந்தும்
கதிபலவுட் புக்குத்தங் கன்மாறு சார
விதிவழிமீண் டெய்துவன வீடு. ச

71. உலகியலவ் வென்றாழை யொட்டாமை யோடு
குலவுச்சூதூக் குணந்தாம்—அலகிலா
விண்ணைமரு வாமைமதி மேவாக் கருத்தனைப்போய்த்
திண்ணமுயிர்க் கன்மமுறுஞ் சீர். ரு

—:o:—

## க0. திரிபதார்த்தத்திறன்

72. சீவனு ளென்றகத்துத் தேறவிசாரிப்பிற்
சீவனே யின்றிச் சிவன்வெளியாம் — ஆவலாய்க்
காணுறவா னின்றாகக் காணப் படுமல்லைப்
பேணுறலுண் டாகவென்றும் பித்து. க

73. இவ்வண்ண மேனை யிரண்டுங் கழிந்தபிற்
செவ்வண்ண நிற்றல் சிவமொன்றே — எவ்வமறும்
உண்மையிது வென்னினுமவ் வுண்மைதனைத் தானிறந்தோன்
எண்ணலெவ னத்துவித மென்று. உ

74. இறைவன்போ லேனை யிரண்டிசை மேலவ்
விறைவன் பரிபூ ரணத்திற் — குறைவாம்
இறைவன் பரிச்சின்ன னென்றா லொழியப்
பறையலா காதப் பரிசு. ங

75. ஒன்றே முதலாக வுள்ளனபோன் மும்முதலை
நன்றெனயா ரும்முன் னயப்பதேன் — என்றாலோ
சுட்டறிவு தன்னாற் சுழலுமுயிர்க் கன்னவுடன்
பட்டலதவ் வொன்று படாது. ச

—:o:—

## கக. திரோதானத்திறன்

76. எறிந்துமெறி பட்டுமுயி ரெண்ணில் பிறப்பிற்
செறிந்தவர லாற்றுத் திறந்தாம் — அறிவின்
மருவலறு மிக்க மறப்பா மறைப்பு
திருவருளே யாகத் தெளி. க

77. இந்தவொரு சன்மத் தியல்விசில வற்றைமனத்
துந்துனை வாய வுணர்ச்சியே—தந்தமுயிர்
வாழ்வதனைத் துன்ப மபமாக்க லான்மறப்பே
ஆவ லுறத்தக்க தால். உ

—:o:—

## கஉ. வியத்தித்துவத்திறன்

78. வியத்தியொடு சத்திக்கு மெய்ம்மை யவற்றை
வியக்குமனக் கற்பனையான் மேவும்—உயிர்க்கு
மருளுறுத்து மந்தமன மாயையதீ தான்மப்
பொருளிடத்து முக்கா லும் பொய். க

79. மெய்யுறமுத் தர்க்கு வியத்தியுள தாமென்னல்
பொய்யுறபெத் தப்புலவோர் புல்லறிவே—பொய்யறுமெய்
ஆய வியோமத் தவர்வியத்தி யவ்வியத்தி
நேயர் வியத்தி நிழல். உ

80. நாடுவா ருள்ளத்துண் ஞானமே செம்பொருளாய்
நீடலா லூனகந்தை நீங்கியபின்—ஈடிலா
ஞானியவர் ஞானியிவ ரென்னவவ ருண்மையிலே
ஊனுருவர் தாமோ வுரை. ங

81. அந்த மகான்மாவை யிந்த மகான்மாவை
விந்தையொடு காண விழைகின்றீர்—சொந்தமாம்
உந்தமகான் மாவுருவை யோர்ந்துளத் தூற்றுணரின்
எந்தமகான் மாக்களுமொன் றே. ச

82. வியத்திசம் பந்தியகய் மேவுங்கா றந்தான்
அயத்தன மெய்ஞ்ஞானி யாகான்—வியத்தகுமாண்
சால்புடைய வெந்தத் தவநிலையே சார்ந்திடினும்
ஏல்புடைய சாதகனே யெண். ரு

83. வியத்தித் துவந்தீர்ந்த மெய்யுணர்வு விட்டுப்
பயிற்றுபல சித்திகளும் பாழே—பயித்தியமாம்
அந்தப்பல் சித்திகளை யார்விழைவா ரான்மாவாம்
தந்திறந்தே றுதார் தவிர்த்து. சு

84. ஆன்றமிரா கார்ஞா னுன்மபர நிட்டனே
தோன்றுபல சித்தர் தொகையாவான்—சான்றெனு
நிற்கு மவனவே நேரும்பல் சித்திகளும்
தெக்கணு மூர்த்தியவன் றேர். எ

—:o:—

## கஈ. பொய்யுறவுத்திறன்

(1) **இழிவுடல்யா னென்ன விகந்திடுக வென்றும்**
**ஒழிவிலின் பாந்தன்னை யோர்க—அழியும்**
**உடலோம்ப லோடுதனை யோரவுனல் யாறு**
**கடக்கக் கராப்புணைகொண் டற்று.** க

—பகவான்

85. முதலையைக் கட்டையா முன்னிப் புனற்கு
மதலையாக் கொண்டுகைத்தான் மாளும்—குதலை
உடன்மல்கு மார்த்தியராய்த் தம்முயிரைக் காண
உடன்முயல்வ தாவுரைப்பார் மாண்பு. உ

86. வாக்குமன மெட்டாத வாய்மையறி வானந்தச்
சூக்குமமே யெண்ணுதா றலமாம்—யாக்கைத்
தொழிலுக் குழைத்தல் துலாமிதித்துத் தண்ணீர்
விழலுக் கிறைத்து விடல். ௩

87. எதிர்ந்தவுல கேதப்பா டெய்துவித்த லெண்ணா
திதந்தருமெய் யாப்பற்றி யிட்டார்—மிதந்த
உளியம் புணையெனக்கொண் டேர்ந்தாற்போ லாழ்ந்து
விளிவர் பிறவி வௌத்து. ௪

88. உடம்போ டுலகை யுறுதியெனப் பற்றி
மடம்படுவோன் சாந்தி மடுத்தல்—மடம்பேர்ந்
துடம்புபோன் றுள்ளத் துயிர்நிலையுற் றேவான்
இடும்பையுற லென்று மில. ௫

——:o:——

## கசு. பண்டிதத்திறன்

89. பண்டிதனென் றென்னைப் பலரழைப்ப தென்னேமெய்ப்
பண்டிதனுக் குற்றகுறிப் பண்புதான்—பண்டுமுதல்
ஆய்ந்தகலை யாவுமறி யாமையாய்ப் போகவவை
ஆய்ந்தவனை யாயு மறிவு. ௧

90. ஆய்ந்தவனு றென்றுளம்புக் காய்வதனு லவ்வகந்தை
ஓய்ந்தொழிவ தாலவ் வுணர்வழிய—மீந்ததன்மெய்
கண்டவனே யன்றித்தற் காணு வகங்காரி
பண்டிதனு மாறென் பகர். ௨

91. அறிந்தவைகள் யாவு மறிமறக்கக் கற்றுட்
செறிந்தவரே யுண்மை தெளிந்தார்—மறந்தவற்றை
ஞாபகத்துக் குய்ப்பார் நலிந்து கலங்குவார்
பரிவகமாம் பெரிய்க்கே பந்தத்து. ங

92. எலாந்தேர்ந் திறமாக்கு மேழை மனுசா
எலாந்தேர்ந்த நீயா ரெனுங்கால்—விலமந்து
வெட்கித் தலைகுனியு மேதா யறவிளிக
மட்கிமட மாமுன் மதி. ச

93. யானென்னுந் தன்மை யியற்பெயரோ டேய்ந்தவினை
ஆன விருத்த லரும்பொருளை—நானின்றாய்
உள்ளபடி யாவ னுணர்கிற்ப னன்னவனே
கள்ளமறு மெய்ப்புலவன் காண். ரு

—:o:—

## கரு. கலையவலத்திறன்

94. காட்டுபல நூலுங் கருத்தடக்க லேசிறந்த
வீட்டுநெறி யென்ன விளம்பலால்—நாட்டும்
கலையிதய மலைதேயாக் கண்டுணர்ந்த பின்னர்ப்
பலகலையா லென்னோ பயன். க

95. ஆய திருவருண்முன் னக்கொண் டகங்காரம்
ஒயவுளத் தெய்தற் குதவாதேல்—மாயப்
புலையாடு மாந்தர் பொறுக்குங் கலையாட்
டலைதாடி யன்றிமற் றென்னாம். உ

96. எந்த வுபாயத்தா லேனு மனமிறந்து
சொந்த சொரூபத் துலக்கத்தாற்—சிந்தைக்
கலக்கமறி னன்றிவெறுங் கல்வியான் மட்டும்
மலக்கமறல் வாசி மருப்பு. ௩

97. காற்றெனவென் றென்றுங் கலங்கித் தடுமாறும்
ஊற்றமில்லிஞ் ஞான வுயிருக்கவ்—வூற்றுத்
தலையா மிதயமுப சாந்தநிலை யல்லாற்
கலையார வாரக் களம். ச

98. குற்றமறு ஞானங் குலவுறா லாமென்னக்
கற்றலுறு மார்வத்தாற் கற்றாலும்—கற்றுச்
சிறந்தகலை யெல்லாஞ் செறிவுமுய லுங்கால்
மறந்தகல வேண்டி வரும். ரு

—:o:—

## கசு. வேதாந்தவுண்மைத்திறன்

99. புலவிடய மன்றிப் பொருள்வேறு தேரார்
கிலமடையும் புந்திக் கிறக்கர்—புலத்தின்
திறத்துவிரா கத்தாற் செழிப்புறஞா னத்தை
வறட்டுவே தாந்தமென் பார். க

100. வேட்கையற விட்டோர்க்கே வேதாந்தங் கைகூடும்
வேட்கையுளார்க் கஃது வெகுதூரம்—வேட்கையுளார்
வேட்கையிலா வீசன்பால் வேட்கையால் வேற்றுமயல்
வேட்கையற நோற்றல் விதி. உ

—:o:—

## கஎ. ஊழ்வலித்திறன்

101. விளக்கடிக்கே நின்று விலகா விருள்போல்
அளக்கருஞா ஞசா னடிக்கே—துளக்கமறக்
காத்துமகங் காரமயற் காரிருள்போற் காதுடலம்
மூத்துவிளிந் தாலூழ்* மூறை. க

102. அட்டமா சித்திபர மான்மஞா னம்மிரண்டும்
பெட்டவா றென்றப் பெருமையென்னே—சுட்டின்
இருவே றலகத் தியற்கை திருவேறு
தெள்ளிய ராதலும் வேறு. உ

——:o:——

## கஅ. வாதனைவலித்திறன்

103. ஆற்றங் கரையென்னு மான்மநிலை நிற்கத்தாம்
ஆற்றாத சிற்சிலவா மாருயிரே—ஆற்று
மறிபுனலாம் வாழ்க்கையிடை வாசச் சிறாரால்
எறியுண் டிடர்ப்படு வார்.

——:o:——

## கசு. அகந்தைமுடித்திறன்

104. காணுந்தன் மெய்யாங் களசிதா காயவளம்
பேணுங் கருத்துப் பிறிதாகி—ஆணவத்தால்
யானென் றெழுந்த விழுக்கே விடயமாத்
தானென் றெதிர்காண் சழக்கு. க

* ஊழ் - அபக்குவம்; காரியமான அபக்குவம் ஈண்டுக் காரணமான ஊழாக உபசரித்துக் கூறப்பட்டது.

105. விண்மையே போலும் விவ்தவிட யங்கண்டு
கண்மயங்கிக் காதலாற் காழ்த்திடுமால்—உண்மையே
போலாகங் கொண்டு புலையாடு வஞ்சப்பொய்ம்
மூலாகங் காச முடிச்சு. ௨

106. பாசமிலாத் தன்சொருபப் பான்மைதனைப் பாராத
பாசம் படர்ந்தவிழிப் பார்வையே—கோசவுடல்
தானாத் தனைமூடித் தன்முன் னுலகமுமாய்த்
தானே புலனாகுந் தான். ௩

107. உட்லைபிட மாக்கொண்ட வூத்தையகங் கார
மடமையொடு வாழுமுயிர் வாழ்க்கை—கடவதொரு
மெய்ப்பனையா காதுசிவ மிக்கபர மான்மாவிற்
சற்பனையாக் காணுங் கனா. ௪

——:o:——

## ௨௦. அகந்தைவலித்திறன்

108. ஊன வகந்தை யொழித்தவர வோனேமெய்
ஆனதுற வோன்மறையோ னாயிடினும்—மானத்
துறவோர் மறையோர் சுமக்கு மகந்தை
அறவோய்த லம்மா வரிது. ௧

109. அன்னியமா நானா வறிவுற்றோ னன்மறையும்
பன்னியதான் மாத்திரம்பார்ப் பானாகான்—தன்னிழவு
பார்ப்பான் பொருளுணரும் பார்ப்பான்மற் றோனுள்ளம்
வேர்ப்பான் பிறர்ப்பழிக்க வீழ்ந்து. ௨

110. கண்ணையிடந் தப்புங் கனிவுடைக்கண் ணைப்பற்றும்
கண்ணையிடந் தப்புமது கூறுந்தன்—கண்ணின்
சிறப்பா லுடலகந்தை சேர்ந்ததேற் சற்றும்
தறப்பாற லம்மா வரிது. ௫

111. சிவபத்தி மாட்சி செடவுடனு னென்னும்
அவபுத்தி யாலே யழிவைத்—தவிர்ப்பதே
கண்ணு லகங்கரித்த கண்ணப்பன் கண்ணப்பக்
கண்ணுதலோன் கொண்ட கருத்து. ௬

—:o:—

## ௨௧. அகந்தைநடத்திறன்

112. மூலமா யெய்ந்த முனைவனது திருக்கூத்
தேலவே காணி னிதுவாகும்—ஞாலத்
தெழுமே லகந்தை யெழுமகில மஃது
விழுமே லனைத்தும் விழும். ௧

113. மூவுலகின் கண்ணுமுழு மோகத்தாற் கட்டுண்டு
யாவுயிருந் துன்னகந்தை பேய்வாழ்க்கை—மேவுபிணம்
தீயாடு காட்டிற் சிதையுடலா வேசித்துப்
பேயாட லல்ல பிற. ௨

114. இம்மையிலே நல்ல விறும்பூ திதுகேளீர்
செம்மை யுளவகில சிற்சத்தி—தம்மை
நினைப்பித்தா லன்றி நினைப்பியலா மாந்தர்
வினைப்பித்தாற் றள்ளுறும் விதம். ௩

115. இணக்கமிலாத் தெம்முனையை யானே யெதிர்த்துப்
பிணக்குவிய லாகப் பிளந்து—வணக்குவேன்
என்னையினித் தூக்கினெவ ரேனுமென வோர்முடவன்
சொன்னகதைச் சூதே யது. ௪

(2) சத்தியினாற் றூமியங்குந் தன்மையுண ராதகில
சித்திகளுஞ் சேர்வமெனச் சேட்டிக்கும்—பித்தர்கூடத்
தென்னை யெழுப்பிவிடி னெம்மட்டித் தெவ்வரெனச்
சொன்னமுட வன்கதையின் சோடு. ௫

—பகவான்

116. நொய்ய சிறுதுரும்பை நூக்கவோ மற்றெரித்தல்
செய்யவோ வாயுவங்கி தேவர்க்கும்—ஐயவோ
ஆற்றலிலை யென்று லகங்கரித்துத் தந்திறலால்
ஆற்றுவது யார்க்கெங்ங னும். ௬

117. ஆவரணத் தாலே யடைப்புண்ட ஞானத்தாற்
பாவருணத் தாலே பதைத்துத்தாம்—பார்வையிழந்
தாபரங் காணா தகங்கரிப்பா ராடுநடம்
கோபுரந் தாங்கிநகைக் கூத்து. ௭

(3) பூபரந் தாங்கவிறை போலியுயிர் தாங்கலது
கோபுரந் தாங்கியுருக் கோரணிகாண்—மாபரங்கொள்
வண்டிசெலு வான்சுமையை வண்டிவை யாதுதலை
கொண்டுநலி கொண்டதெவர் கோது. ௮

—பகவான்

118. அரும்பாரச் சும்மைக்கணீ ராவிவலி யாலே
திரும்பாகக் கொண்டுநெடுந் தூரம்—விரைந்தோடும்
பொங்கழலின் வண்டியிலேப் போமேறினார் தஞ்சுமையைத்
தங்கிடலை மேற்சுமவார் தாம். ௯

119. அன்னதே போல வகிலபரா சத்தியே
தன்னியல்பா லெவ்வெவையுந் தாங்கலால்—மன்னுயிர்தம்
சிந்தா குலச்சுமையுஞ் சிற்சத்தி மேற்போட்டுச்
சிந்தா குலந்தவிர்தல் சீர். ௧௦

120. மருவுதியா னத்துவெரு வந்தெனமெய்க் கம்பம்
மருவலகங் கார மதியால்—உருவகந்தை
வீந்துசிதா காய வெறுவெளியாய் நிற்கினுப
சாந்தமுறக் கம்பமறுந் தான். ௧௧

121. வரையாது பாயு மனப்பேய் மடக்கப்
புரைபா டொழிந்த புலத்தால்—திரைபா
டவிந்தமுந் நீர்போ லகந்தை யடங்கிக்
குவிந்து கிடத்தல் குணம். ௧௨

122. கல்லா வகந்தைக் கலக்கத்தி னின்றகழன்
றெல்லா மிறைசெயலென் றேயுணர்ந்து—பொல்லாத்
தவறுங்கர்த் தத்துவந்தான் சாய்தலே யுண்மைத்
தவந்தாங்கு சத்தி தரி. ௧௩

—:o:—

## உஉ. ஆன்மாபகாரத்திறன்

123. பன்மயமாய்த் தோற்றும் பலவுலகும் பல்லுயிரும்
தன்முகமாய்த் தோற்றித் தனிலொடுக்கும்—சின்மயமாம்
வானுப தந்நிலையை மாழாந்த பேதையரே
ஆன்மாப காரஞ்செய் வார்.

———:o:———

## உ௩. நரகபயத்திறன்

(கலிவிருத்தம்)

124. நரக பயத்தா னடுங்குது மென்பார்
நரக சொரூப நவையுணா ராரே
நரக சொரூப நவையை யுணர்ந்தோர்
விரகறிந் துண்மையை மேவினர் தாமே.

———:o:———

## உ௪. அகமுகமாட்சித்திறன்

(நேரிசை வெண்பா)

125. பார்ப்பானைப் பாராமற் பார்க்கப் படுபொருளைப்
பார்ப்பதனு லென்றும் பரிதவிக்கும்—பார்ப்பாரே
நுந்தம் புறமேனீர் நோக்காதே யுண்ணோக்கித்
தொந்த மறுத்தல் சுகம். க

126. தொந்தக் கருத்தே துயருழத்தற் கேதுவாய்த்
தந்தமுப சாந்தியைத் தள்ளுதலால்—அந்தக்
கருத்து மனத்தைக் கவராமற் சித்த
விருத்தி யடங்கல் விதி. உ

127. உள்ளே யிருப்பதனை யோராம லூர்தோறும்
புள்ளே யெனப்பறந்து போவீர்காள்—உள்ளத்
தறிவோர் சிறிது மலையா தடங்கிச்
செறிவே பரம சிவம். ௩

128. வளியா லழிவெய்தும் வங்கத்தின் பாய்போல்
வெளியே பரந்து விட்டாமை—நளிகடல்வாய்த்
தாழப் படிந்து தரித்தநங் கூரம்போல்
ஆழப் புகுவ தறிவு. ச

129. புறமுகத்துப் பாயுந்தன் புத்திதனை யுள்ளே
அறநிறுத்துக் காக்கு மதுவே—அறவோர்
பதியா மிதயப் பரசொருபங் காணும்
அதிகார தீர மறி. ரு

—:o:—

## உரு. பரலோகத்திறன்

130. பரனுலகெங் கேயோ படிவதா வெண்ணும்
மருவ லுடலகந்தை மாயம்—மருவுறத்தான்
எங்கு மிலைதன் னிதயத்தி னன்றியரன்
தங்கவுல கென்று துணி. க

131. அந்த வுலகுக் கவகாச நல்கலொடு
விந்தையா லத்தை விளக்கற்கும்—சொந்த
நிறைவொளியாய் நீதா னிகழக்காண் டல்காண்
இறைவனுல குன்னு ளிருப்பு. உ

—:o:—

## உசு. சத்திசிவத்திறன்

132. தனிமுதலா மெந்தத் தனையன்றிச் சிந்தை
தனதுருவா நின்றபரா சத்தி—தினையளவும்
இல்லையோ வந்த வெழுவாயா முள்ளமே
தில்லைவாழ் சுத்த சிவம். க

133. மன்னியபே ரின்பான் மன்றா னெதனையடைந்
தன்னியத்தை நாடி யலையாதோ—துன்னும்
நவநவனா நுப்ப நல்கவ் வுளமாம்
சிவமே மனோரஞ் சிதம். உ

134. மட்டறுமெய்க் காதன் மயக்குற்ற கோபிகை
சிட்டர் தமக்குத்தஞ் சித்தமே—விட்டிலைச்செந்
தீபசிகை போலகந்தைச் சேரழிக்கு முள்ளமே
கோபிகா நாதன் குறி. ௩

——:o:——

## உஎ. இறைவழிபாட்டுத்திறன்

### (இன்னிசை வெண்பா)

135. இழைத்தநா ளெல்லை யிகந்து பிழைத்தொரீஇக்
கூற்றங் குதித்துய்ந்தான் மார்க்கண்டன்—ஆற்றுசிவ
பூசனையால் வன்காலநாசனையா யிற்கால
பாசனையா நிற்கும் பரிந்து. க

### (நேரிசை வெண்பா)

136. எண்ணுவன வாமெட் டெழில்வடிவு மெந்தையாம்
அண்ணலுரு வென்னு மபேதமதி—நண்ணினராய்
ஆங்கவற்றுக் கேற்றவா றுற்றுவழி பாடனைத்தும்
ஓங்குசிவ பூசை யுணர். உ

——:o:——

## உஅ. திருநீற்றுத்திறன்

137. உள்ளத் தநாதியா யுற்றபழ வர்தனைசேர்
கள்ளவுயிர் ஞானக் கனலால்வெந்—துள்ளே
விராவுசீ ருண்மையாய் மிஞ்சுதிரு நீறே
பராவிபூ திப்படிவம் பார். க

(பஃறொடை வெண்பா)

138. குருவடிவுங் கொண்டவருட் கோமானும் பார்ப்பான்
வெருவலுறுஞ் சீவபோ தம்மீங்—கருவழிய
ஓதி னொருமொழியை யோதிப் பிணாவாக்காற்
றாய்தாய ஞானச் சுடர்கொளுவிப்—பூத
இதயத்தே சீடற் கினிதிற் புடம்வைத்
ததுவருள்வ தாகுமறி. ௨

(நேரிசை வெண்பா)

139. ஆன்மாவ லோகனத்தா லந்தர் முகப்பட்டுத்
தான்மாய்த லுற்ற சடவகந்தை—வான்மகிமற்
றெங்குமொன்று முள்ளத் தெரிஞானச் செந்தழலே
குங்குமச்சிந் தூரக் குலா. ௩

——:o:——

௨௯. சத்திசாந்தித்திறன்

140. ஆன்மவலி யான்முடிக்க லாகா வினையில்லை
ஆன்மவலி யென்ப தருள்வலியாம்—ஆன்மவலி
மாட்டாது தோள்வரள் வலிமாட்டு மென்னல்புலை
யாட்டாய மாயை யழுக்கு. ௧

141. ஆற்ற லமைதிகளை யன்னியம்போல் வெவ்வேறுச்
சாற்றுவா ருள்ளபடி தாமறியார்—சாற்றும்
அகநோக்கத் தாலமைதி யாவதே யேனை
முகநோக்கத் தாலாற்ற லாம். ௨

142. மிகைசா லொழுக்கம் விளையு நிலத்தில்
வகைசேர் தெறல்வன்மை வாய்ந்தும்—தகைமைசால்
எண்மையோ டேய்ந்த வியல்பே யிறைமைசேர்
உண்மை யுணர்வுக் கழகு. ௩

——:o:——

## ௩0. சித்திவேட்கைத்திறன்

143. யாவுமாய் நின்றதன்னை யேயுதவு மீசன்மாட்
டாவலா யற்பசித்தி யாசித்தல்—யாவும்
வழங்கு முதாரகுண வள்ளன்மாட் டற்பப்
பழங்கூ றிரக்கும் பரிசு. ௧

144. அமிதசிதா காசசொரூ பான்மசித்த லோகத்
தமர்ந்துசில சித்தி யவாவல்—அமுத
வளங்கா ணுமுண்டி வழங்குறுவா னத்துப்
புளிங்காடி வேண்டினற் போன்ம். ௨

145. முத்தி நெறிக்கண் முயல்சா தகர்விவித
சித்திகளிற் சிந்தை செலுத்துவரேல்—மெத்திய
பந்தமேன் மேலும் பலப்படுமாற் றுலகந்தைக்
கந்தமேன் மேற்கொழுக்குங் காண். ௩

(4) சித்தத்தின் சாந்தியதே சித்தமா முத்தியெனிற்
சித்தத்தின் செய்கையின் றிச் சித்தியாச்— சித்திகளிற்
சித்தஞ்சேர் வாரெங்ஙன் சித்தக் கலக்கந்தீர்
முத்திசுகந் தோய்வார் மொழி. ௪

—பகவான்

146. பரமாய தன்னைவெறும் பாழுடல மாகப்
பிரமாத மாற்றும் பிழையால்— உரன்மேற்கொண்
டாற்ற வெறுத்தக்க தன்றி யறிஞராற்
போற்றத் தகாது புகழ். ௫

## ௩க. அமுதநிலைத்திறன்

147. ஆர்த்திருரு மெய்யுணர்வின் பார்தன் னமுதவியல்
வேத்தியமா காதுமறை வித்தியாழ்—ஊத்தைப்
புலையாடு பேயகந்தை பொன்றினார்க் கேயாம்
தொலையா வமுதத் துவ்ம். க

148. ஏதிலுடம் பேதன்மெய் யென்னுமோ கத்தானே
சாதல்பிறப் புத்தனக்குச் சார்ந்தனவாம்—ஆதலால்
அந்தமா மோக மழிந்தளவே யெய்தியதாம்
சொந்த வமுதத் துவம். உ

149. அயலொன்று தேக மகமென்று தோன்றும்
மயலன்றி யில்லை மரணம்—மயலொன்
றகந்தையழிந் தொன்று மபேதனா னன்ம
சுகந்தா னமுதத் துவம். ௩

150. இந்தச் சரீரமே யானென் றிருக்குமவன்
அந்தச் சரீர வழிவஞ்சிச்—சிந்தைதனை
ஆய்ந்துணர்ந்தான் மாவா யழிந்தொழிந்தா லன்றிமற்
றேய்ந்திடுமோ சாவா வியல்பு. ௪

151. சித்த விகாரத் தியக்கமறு மெய்த்தெளிவே
புத்தமுத மாகமனம் போற்றுக—சுத்த
உணர்வா மதனை யொழிந்தபிறி தாலே
தணவாதுண் மோகமாஞ் சாவு. ரு

—:o:—

## ௩௨. நாயகற்பத்திறன்

152. உண்றுபடு மாயமா யுற்றழிப வும்பொருளாக்
கூறுவ சாரமுறைக் கூற்றேகாண்—தேறும்
அறிதியாய் மிக்கமெய் யான்மவுணர் வொன்றே
உறுதிப் பொருளா முணர். ௧

153. அடுத்தடுத்து மூளு மகந்தைபதன் மூலத்
திடத்தொடுக்க மாக விலங்கும்—வடித்தெடுத்த
உண்மைத் தெளிவா முயரான்ம ஞானமே
உண்மையாங் கற்ப முணர். ௨

——:o:——

## ௩௩. காயசித்தித்திறன்

154. பிணியா மனைத்தும் பிறப்பிக்கு மூலப்
பிணியா முடற்பெற்றி தேறார்—பிணியை
வெருவாது வேண்டி விழற்கிறைப்பார் போல
உருவசித்தி வேண்டியுழல் வார். ௧

155. அடும்பிணிகட் கெல்லா மடிப்படையாய் நின்ற
விடம்படுமாங் காரப்பாழ் வீணர்—உடம்பு
வலுப்படற்கா நோய்வலுக்க மாமருந்துண் பார்போற்
சலிப்பறத்தாஞ் செய்வார் தவம். ௨

156. வருந்தித்தாம் வேண்டி வறுமையடைந் தாற்போற்
றிருந்தப் பலகாலஞ் செய்த—அருந்தவத்தாற்
பூன்றமா மோனம் பொருந்தா துடலகந்தை
ஊன்றலாந் திண்பே துறவு. ௩

——:o:——

## ௬௪. வைராக்கியத்திறன்

157. கோரிக்கை வேண்டிக் குவலயத்தோர் நின்னுள்ளம்
பூரிக்க நல்கும் புகழ்பூசை—வீரியத்தோ
டாண்டதவத் தோயை யகப்படுக்கு மாயையிடு
தூண்டிற்பொன் னாகத் திணி. ௧

158. இம்மை மறுமையிரண் டின்பங் களினுமுவர்ப்
பெம்மனிதர் தம்மு ளியல்பேயாய்—உம்மையுள
திண்மையுறு பாக்கியத்தாற் சேரு மவர்க்கெளிதின்
உண்மை யுணர்ச்சி யுறும். ௨

159. உன்னொடுநட் புப்பூண் டொழுகுங் கொழுதகைமை
துன்னுமெனே யென்றுந் துறவாதே—துன்னுமயல்
ஆசைபற வெற்றி யறிவுச் சுடர்கொளுத்தும்
நேசவயி ராக்கியமே நீ. ௩

160. பேயொடுநட் டாலும் பிரிவரிதே லெம்மையினும்
தீயிடரொட் டாதுறுதி சேர்ப்பிப்பாய்—ஆயகுண
நல்லாயுன் னட்புரிமை நானிழக்க நேரினது
பல்லார் பகையிற் பழுது. ௪

161. எவ்வெக் கருத்தெழினு மெட்டுணையு முய்யவிடா
தவ்வக் கருத்துமுழு தக்கணமே—தவ்வைத்
தளர்ச்சியுறு துற்பத்தித் தானத்தே சாய்த்தல்
கிளர்ச்சிதரு வைராக் கியம். ௫

162. விந்தையா மான்ப விசாரத்தால் வாதனைதாம்
சிந்தையர ணின்றவெளிச் சேர்தோறும்—அந்தத்
தொகைபடுதெவ் வோரைத் துடைத்துவரி னீற்றிற்
பகையரணந் தன்கைப் படும். ௬

—:o:—

## ௫௫. ஞானவைராக்கியத்திறன்

163. என்றவுல கோர்வா னினுமபலா யற்றாகத்
தோன்றுமை ஞானத் தலக்கமாம்—ஊன்றியுளம்
பற்றலற விவ்வுலகைப் பாழா மதித்துத்தான்
எற்றல் வயிராக் கியம்.

—:o:—

## ௫௬. சித்தசுத்தித்திறன்

164. உளப்பாடு சான்றவுயி ரோவியத்திற் றெய்வ
வெளிப்பாடென் றன்றோர் வியப்பர்—களிப்பால்
மிகத்தீமை செய்யும்பல் வேறெழில்கள் போலா
தகத்தூய்மை யேமெய் யழகு. ௧

165. அகத்தழகல் லாது புறத்தழகு காணின்
மிகுத்தழிவு பாடே விளையும்—முகத்தின்
எரிசுடரை விட்டிலிச் சித்தமொடு நாகம்
விரிபெடையோ டாடும் விதம். ௨

—:o:—

## ௫௭. நிருத்தியத்திறன்

166. உழுவலன் புக்கிடனு வுற்றபே ரின்பாய்
விழுமியமெய்ஞ் ஞான விசும்பாய்—எழுவாய்
அழிவிலா வான்மநிலை யாம்பூன்றி நின்று
நழுவலே காலனென் நாடு. ௧

167. கருவைக்காத் தேங்குங் கலக்கத்துக் கேது
குருவைக்காத் தந்தக் குருவின்—திருவருளால்
ஓர்ந்து பிரிவை யுணர்ந்திறுகத் தன்னைத்தான்
சேர்ந்து கிடக்கை சிறப்பு. ௨

———:o:———

## ௫௮. உயிர்நிலைத்திறன்

168. சூதலா வுள்ளத்தே தோய்தலா லாருயிர்தன்
வாதனையு மாங்கே வதிவதலால்—மீதலமாம்
மூளைக்கே மூண்டு கிடக்குமேன் மூளையொடு
மாளாதோ வாதனைதான் மற்று. ௧

169. குண்டலியா மங்கிக் கொழுந்துமே னோக்கலால்
மண்டையமு துங்கீழே வார்தலால்—அண்டர்
மதியமுதத் துக்குமதஞ் செய்குண் டலிக்கும்
இதயமே மூலமென் றெண். ௨

170. எவ்வெவ் வயிற்றன்னை யெண்ணினு னெண்ணியாற்
கவ்வவ் வயிற்று னமர்ந்ததா—அவ்வெணத்தாற்
றேற்றிடினு நானெனுமத் தோன்றற் கிலயத்தும்
போற்றுமுனத் தானே புகல். ௩

171. எவ்வுவத் தைக்குமிட னென்னுமுளத் தன்னைவிடுத்
தெவ்வெவ் வயிற்றன்னை யெண்ணுவான்—அவ்வவ்
வயிற்போ யிலயித்து மாழ்கலல் லாலோர்ந்
துயப்போவர் னல்ல னுளத்து. ௪

——:o:——

## ௩௪. இதயத்திறன்

172. தள்ளத் தகுவதொடு கொள்ளத் தகுவதுமா
விள்ளப் படுமிதயம் வெவ்வேறும்—எள்ளும்
புலிவிடய மாகப் பொருந்துமுதன் மார்பின்
றலமிடது பக்கஞ் சடம். ௧

173. உள்ளும் புறமு முறப்போர்த் தொளிரிதயம்
தெள்ளியோர் தேறவலஞ் சேர்வதாம்—எள்ளும்
உடன்மயமா மூடர்க்கே யூன்மயமாய் மார்பத்
திடமுகமா யெய்திதய மெண். ௨

174. உயிரின் கிழவோ னுடம்பிலித யத்தே
செயிர்தீரச் சேர்ந்துகிட வானேற்—பயில்வதேன்
யாவருநா னென்னும்போ தவ்விதயஞ் சேர்வலது
மார்வந்தாந் தட்டும் வழக்கு. ௩

175. அனைத்துந்தோன் றுந்நிலைக்கண் ணடியென லாகும்
இனைத்தெனலா காமெய் யிதயம்—தனித்தொளிரும்
வெற்றுணர்வாய் விஞ்சு விமலவெளி யாமஃதே
முற்றுமுழு மோன முதல். ௪

176. இதயக் கருவே யெவற்றுக்கு மாதி
இதயக் கருவே யிடையும்—இதயக்
கருவே யிறுதி கனவிசும் பாமஃ
தருவேயன் றுண்மை யொளி. ௫

177. அந்தவித யத்தை யறிந்தா ரவில்முறார்
பந்தமதி கெட்டரர் பரமானார்—தொந்த
நினைப்பற்றா ருள்ளே நிசபரமா னந்த
முனைப்புற்றார் மோக முசித்து. ௬

178. அகத்தும் புறத்து மனைவத்தாய் நின்றே
அகத்தும் புறத்துமதின் றாகும்—அகம்புறங்கள்
என்னும்பே தத்துக் கிடமாகத் தோன்றுமுடல்
உன்னுமனக் கற்பனையா லேரீர். ௭

179. ஆகலினவ் வாகவடி வாகுமகங் காரமறச்
சாகலைத்தாங் கண்ட சமர்த்தரே—மோகம்
அறத்தெளிந்த நுட்பமதி யாலதனை யெங்கும்
உறத்தெரிந்து சேர்வ ருயர்வு. ௮

180. விக்கேப மோகமற வீந்துண்மை மாத்திரமாத்
தொக்கேயுஞ் சுத்தந் துலங்குளமே—மிக்க
நயந்தருவா ளுள்வோரு நாட்டமுறுஞ் சீர்சால்
உயர்ந்தபர மான்ம வுலகு. ௯

—:o:—

## சo. குருவாராய்ச்சித்திறன்

181. எந்தவுட லேனுமுட லியானென்னு மெண்ணம்போய்ப்
பந்தமற நின்றொளிர்சற் பானமே—சிந்தும்
சகல வுயிருளமுந் தன்மயமாத் தங்கும்
அகிலபரா சத்தி யறி. க

182. தொந்தமற வுள்ளத்துட் சும்மா விருந்தொளிரும்
இந்தவுணர் வாமெய் யியற்கையே—மந்த
அவுணவியல் பாய வகந்தைமதி காணு
மவுனமெனு ஞான வரம்பு. உ

183. அந்த விலாச மமைந்தோனே தன்னடைந்த
எந்த வுயிரையுந்தன் னின்னருளாற்—றொந்தமிலாச்
சொல்லருஞா னன்ம சொரூபத்திற் சேர்க்கமிக
வல்லகுரு வாக மதி. ங

184. ஆன்மசொரூ பத்துக் கபிமுகமாச் சேர்த்துயிருக்
கான்மபர போத மளிப்போனே—ஆன்ம
சொரூபமா மீசன் சொரூபமென் றுன்றோர்
பராவுங் குருபரனைப் பற்று. ச

(கலிவிருத்தம்)

185. பராகாய மாகப் பயின்றிடா நின்றே
நராகார மாத்தோன்று ஞான குருவை
நிராகார னென்றுணர் நெஞ்ச மிலாதார்
துராசார பாப துரந்தரர் தாமே. ரு

———:o:———

## சக. குருவருட்டிறன்

### (நேரிசை வெண்பா)

186. பஞ்சயா முவப்பூவேர்ப்புப் பற்றிச் செயலால்
வஞ்சசேர் வினையின் வசத்தால்—விசியுண்
டடுப்பா ரவல மகற்றிவீட் டின்பம்
கொடுப்பானே போலுங் குரு. க

187. பொய்யைமெய் யாகப் புலம்புவார்க் கம்மாயு
மெய்யைப்பொய் யாக விளக்குவான்—வையமிசைத்
தூலமா யுற்ற சுடர்க்குஞ் சுடரொளியாழ்
கோலமா யுற்ற குரு. உ

188. இல்ல திலதாக வேகப் பரஞ்சுடராய்
உள்ள துளதா வொளிருமா—றெல்லெனவே
இல்லா துளனு யினுணைத்தன் கண்ணிணையாற்
கொல்லாது கொல்வான் குரு. ங

189. அவிச்சைநன வாங்கனு வாசானுற் சீடர்
கவிச்சமயல் போய்த்தெளிவர் காணுய்—பவிச்ச
கனுவகத்துக் கண்டசிங் கத்தாலே யானை
தனுதுயில் போய்விழித்தல் சான்று. ச

190. நல்லா சிரியருண் ஞானவிழிப் பட்டோர்தாம்
வல்லியத்து வாய்ப்பட்ட மான்போலப்—புல்லியல்போய்க்
கைவலியங் காணக் கடவரலா லெஞ்ஞான்றும்
கைவிடத் தாம்படார் காண். ரு

191. ஒருசேட மாக வெளிரொளியைக் காட்டித்
தருமோன வள்ளலாய்த் தங்கும்—குருசீடர்
கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனு மில. ௬

———:o:———

## ௬௨. உறுதியுரைத்தற்றிறன்

192. பன்னற் கரிய பரமகுரு வின்னருளை
உன்னற் குரியபடி யுன்னியே—முன்னிற்கும்
பொய்ம்மாயத் தோற்றப் புணர்ப்பிற் புகுதாது
சும்மா விருப்பே சுகம். க

193. உய்ந்துபோ வாருக் குறுதி யுரைக்குங்கால்
ஐந்து மகப்படுக்கு மாமைபோல்—ஐந்தும்
அடங்கி யொடுங்கி யகநோக்கிச் சிந்தை
மடங்கி யிருப்பே மகிழ்வு. உ

194. பற்பலவுட் சிற்சிலவும் பார்ப்பானை யன்றியிலாச்
சொற்பனமே யாகத் துணிவுற்றுக்—கற்பனையாம்
நாமரூ பத்துலகை நாடா தறிவுருவாம்
ஏமப் பொருளையே யெண். ௩

195. உலகவிட யத்தி னுழியா துழலும்
கலகமன மாயை கடிந்தே—சலவகந்தை
செத்துச் சிவமயமாய்த் தீர்ந்துலக வாதனைபோய்ச்
சுத்தவறி வாகத் துலங்கு. ௪

196. அழல்சா மநான்மஷிட யத்துவேறு மண்டின்
றழலா தொழியா துள தண்ணீ—னிழலாய்
விரிந்தார்ந்த சாந்தியொளிர் வீட்டா மிதயம்
பொருந்தான்ம போகம் புசி. ரு

197. பத்தியுளம் பொங்கப் பரன்பதமே தஞ்சமாம்
புத்தியொடு செய்தவமேற் பூண்டோயே—சத்திதரு
சித்திப்பே ராசையறத் தீர்ந்தே சதாசிவமாம்
முத்திப்பே ரின்ப முயங்கு. சா

198. அனர்த்தமறு மெய்யா மரன்வா லறிவின்
கனத்தபிழும் பாமொண் கழலே—மனத்து
நினைப்புமறப் பொன்று நிகழா தருளின்
முனைப்புவசப் பட்டு முயங்கு. எ

——:o:——

## சாரு. உச்சிட்டத்திறன்

199. ஆசா னநுபூதி யாச்சி டனுக்கருளும்
தேசார் மொழியேயுச் சிட்டமாம்—பேசாது
நிட்டா பரனை நிற்றலே யுச்சிட்டம்
உட்டான் கொளலா முணர். க

200. மோனகுரு வாய முழுமுதலுக் கூனை
மானமாந் தன்னை வழங்கிப்பின்—பானமாய்
எஞ்சிய தன்னை யிதயத்துட் கோடலே
விஞ்சுமுச் சிட்ட மிசைவு. உ

201. பாலமெலாம் பாற்றும் பரமபவித்திரமாம்
தேவர் மிசைந்தபரி சேடமென்பர்—பூவுலகிற்
சச்சிட்டர் வாழுஞ் சதாசார வாழ்வேயவ்
வுச்சிட்ட மாக்கொ ளுளத்து. ௩

——:o:——

## சச. குருவழிபாட்டுத்திறன்

202. உரிமையா லாண்டானுக் குற்றசச் சீடர்
மரியாதை யாற்று மரபு—தெரிவை
இறைவற் கியற்றுமரி யாதையே யென்ன
அறியிற் புறத்துமட்டே யாம். க

203. கோதறுமெய்ஞ் ஞானக் கொழுந்தாங் குருமூர்த்தி
பாதமது சந்திக்கும் பான்மையோர்க்—கேதமறு
பத்திதரு மந்தப் பரனருளான் மெய்ஞ்ஞான
சித்திவருஞ் சித்தந் தெளிந்து. உ

204. வருவா தனைமாய்த்து மாயமோ கத்தால்
வெருவாத ஞானம் விளைக்கும்—குருபாத
வந்தனையார் பத்தி வழிபாடே யுண்மையுறு
மந்திரமாம் புந்தி மதி. ௩

205. ஞானகுரு வாக நடக்கும் பரசிவனுக்
கானவழி பாடனைத்து மாற்றிடினும்—யானற்
றுயிர்க்குயிரா மந்த வுடையான்மாட் டொன்றும்
அயிக்கியமே போற்றி யடைவு. ச

206. சீடன் குருவென்னச் சீவன் சிவனென்ன
மூடவகங் கார முழுமோகம்—கூடும்பாழ்ம்
பேதமதி சற்றும் பிறவாத மோனமே
பேர்தநமஸ் காரப் பொருள். ரு

207. கோனென்னு ஞான குருபோதக் கட்டழலால்
யானென்னுஞ் சீடவுணர் வீடழிய—மோன
நிருவா தனையோங்கு நிட்டையே ஞான
குருபூ சனையாக் குறி. சு

208. ஏன்றநா னூரெனவுள் ளேய்ந்தவுசீ வாலெழுந்த
மூன்றவது போககுரு போதநிலை—ஊன்றலாற்
பொய்ச்சீட போதமறப் பொன்றலே தேசிகர்க்குச்
சச்சீடர் செய்பூ சனை. எ

209. குருசொரூப மாகக் குலவுறுமெய்ஞ் ஞானப்
பருதியென வெங்கும் பரந்த—பரவெளிக்கே
சீவமதி தோன்றாச் சிறப்பியல்பே செய்தக்க
தேவகுரு பூசை தெளி. அ

210. ஆத்தநடை யாற்று லகமோ டிதமாக்க்
கோத்தவடி வெல்லாங் குருவடிவாப்—பார்த்தலுடை
ஞானகுரு போதமலி நாட்டமே சச்சீடர்க்
கானகுரு பூசை யறி. கூ

211. ஏகரச மாக விருந்தொளிரு மான்மாது
போககுரு போதப் புணரியிலே—தேக
உருவா மகந்தை யுணர்வாய வாலி
கரைவே குருபூசை காண். க0

212. நீக்கமறு மாசா னின்றவுபரிச் சின்னமா
ஆக்கலுற மாசா மகங்கார—நோக்கம்
மருவா வியல்பே மலையிலக்கா நின்ற
குருபூ சனையின் குலா. ௧௧

213. உடலாதி தேசிகனுக் கொப்படைத்த பின்பவ்
வுடலாதி யானெனதென் றுட்கொண்—டிடலாய
தத்தாப காரச் சழக்குத் தவிர்தலே
சுத்தகுரு பூசை துணி. ௧௨

214. அழலும்முத் தாபமவித் தாண்டகுரு நாதன்
கழல்கன்று காண்புலவெங் கானற்—குழலுமுயிர்ச்
சேட்டை யொடுங்கிச் செறிதலே தீர்த்தன்பூந்
தாட்டுணைக்குச் செய்பூ சனை. ௧௩

215. மனத்துருவ மாய மயலா மகந்தை
தனைத்துருவி யுள்ளத்துட் சார்தல்—அனைத்தே
மனுதீத மாய மவுனகுரு மூர்த்தி
தனுதுமலர்த் தாட்பூ சனை. ௧௪

216. சடலமாச் சஞ்சரித்துஞ் சச்சித்தே போல
நடலஞ்செய் காரகந்தை நாட்டப்—படலம்
படராமை பூசை பரவெளியா நின்று
சுடரர்சான் பூந்தாட் டுணர்க்கு. ௧௫

—:o:—

## சரு. குருமிட்சித்திறன்

217. குற்றமெலா நீத்துக் குணமனைத்துஞ் சேர்ந்தாலும்
சுற்றமெலா நீத்துத் துறந்தாலும்—சொற்றபல
செய்தவங்கள் செய்தாலுந் தேசிகனைக் கூடமனள
வெய்துவரோ வின்ப நிலை. க

218. முடிவாய நன்மையா முத்திப்பே ரின்பக்
குடிவாழ்வு பெற்றுக் குலவல்—புடியாய
மூன்றுமொன் றாக முடிந்தகுரு நாதனருள்
ஏன்றுகொண் டன்றி யிலை. உ

219. அகமும் புறமு மகமு மிதமும்
இகமும் பரமு மெலாமும்—புகுந்தளவற்
றுண்டா னறிவொளியா யம்மெய் யடியாருட்
டேண்டா மணிவிளக்காந் தூண். ந

220. கலிவீட்டி யாண்டான்றன் காதலர்நெஞ் சத்திற்
கொலுவீற் றிருக்குங் குலாச்சீர்—மலைபோற்றும்
கண்டவர்கள் விண்டிலர்கள் விண்டவர்கள் கண்டிலர்கள்
மண்டு மடியார் மறை. ச

221. உகந்த வடியா ருளமுடிச்சை யோச்சி
அகழ்ந்தெறிய வல்ல வரிவாள்—அகந்தை
மயல்போய தேசிகர்தம் மாண்பாய வான்ம
இயல்பாய நிட்டை யினிது. ரு

(இன்னிசை வெண்பா)

222. கற்றுங்கு ஞானங் கடைப்பிடித்துப் புன்புலமாம்
மற்றுங்குச் சிந்தை வழுவாது தேற்றமோ
டுண்மையொளி யாயுள் ளொழுகு மொழுக்கமே
உண்மையுப தேச முணர். ௬

——:o:——

௪௬. சாதுசங்கத்திறன்

(நேரிசை வெண்பா)

223. அறத்தா றிதுவென் றடங்காது வாழ்க்கைக்
குறிக்கோள் கடைப்பிடித்துட் கொள்ளாத்—திறத்தால்
வெறுவாயை மெல்லும் விதண்டையார் சாரல்
குறுகா ரறிவுடை யார். ௧

224. சித்தங் கலங்கித் திருவாய் சளசளக்கும்
பித்தரினஞ் சேரிற் பிழைபலவாம்—செத்துமனம்
சுத்தமா மோனந் துலங்கப்பெற் றுருறவே
உத்தமநட் பாகு முணர். ௨

225. துர்க்குணங்கள் யாவுந்தற் சோர்ந்தபிர மாதமாம்
பொய்க்களியே மூலமாப் பூத்தலால்—அக்களிமால்
சேர்ந்த வகந்தை சிதைந்தமெய்ஞ் ஞானோப
சாந்தமே சற்குணச் சால்பு. ௩

226. கோதிலா ஞான குணத்தவரே சற்குணத்தோர்
ஏதிலார் மற்றை யிழிகுணத்தோர்—ஆதலாற்
பொய்தீர்ந்த மெய்யுறமப் புண்ணியர்தம் பக்கலே
உய்திபெற வேண்டு முணர். ௪

——:o:——

## சஎ. பிரம்மவிச்சைத்திறன்

227. காணப் படுமுலகைக் காணுமீது யவ்வுலகைக்
காணுந் தலைக்காணக் கற்பதே—மாணவராற்
பேணத் தரும்பிரம விச்சையெனப் பேசுவார்
காணருங் காட்சி யவர். ௧

228. கானனீர் வையமுமக் காசினியைக் காண்பானும்
பானமார் கண்களின் பார்வையுமாய்—ஆனதனை
எச்சமறச் சுட்டக்கா லெஞ்சியதைக் காண்டலே
விச்சைமற் றல்ல பிற. ௨

—— :o: ——

## சஅ. சமயவுண்மைத்திறன்

229. அன்னியமோ வாகா தனன்னியமா யெல்லையிலா
மன்னுயிர்மாட் டெல்லாம் வயிங்கொளியாம்—பின்னமறப்
பன்மணியி னூடும் பயிலுஞ் சரடுபோல்
எம்மதத்தி னூடு மிறை. ௧

230. பலவாந் தகளிகளைப் பற்றித்தீ யொன்றே
பலவாகக் காணும் பரிசே—நிலவும்
பலவா முபாதிகளைப் பற்றித்தா னொன்றே
பலவாகக் காணும் பரிசு. ௨

231. அமையுமதீ தத்தை யகவெள் ளிடையில்
இமயமெனக் காட்டுமோர்சொல் லின்றேற்—சமய
வருக்கமெல்லாஞ் சேர்ந்துபர வஸ்துவையாய் வாதத்
தருக்கமெலாஞ் சந்தையிரைச் சல். ௩

—— :o: ——

## ௪௯. கடையிலாக்காட்சித்திறன்

232. உயிர்க்கோயி லுள்ளே யுடையானைத் தேடித்
தியக்கமறக் கண்டு தெளிந்தோர்—வியக்கும்
உலகப் பெருங்கோயி லுள்ளுமவன் றன்னைக்
குலவுறக்காண் கிற்பர் குறித்து. ௧

233. உயிர்க்குயிரா மீச னுறைந்தொளிரு முண்மை
மயக்கறவே தேர்ந்த மனத்தோர்—நயக்க
நிகழும் பரன்சந் நிதியாகு மேனோர்
இகழும் புழுமுன் னெலாம். ௨

234. ஊன்கணார்க் கொண்மை யுருவத்து முள்ளப்பூ
வாங்கண்மா யோகியர்க்கு மந்தணர்க்கு—வான்கெழுதீ
யுவ்வயினுங் கண்ணு யிரம்படைத்த வித்தகருக்
கெவ்வயினுந் தோன்று மிறை. ௩

——:o:——

## ௫0. தன்னிழப்புத்திறன்

235. தொல்லை யகங்காரத் தோன்றற்குத் தேருங்காற்
சொல்லள வல்லாற் பொருளுண்டோ—இல்லையே
உள்ளதேற் பொய்யரவுக் குண்மைக் கயிறுபோற்
கள்ளமிலா மெய்ப்பொருளே காண். ௧

236. அகந்தையடங் கிற்றன் னதிட்டான மாக
நிகழ்ந்தபரந் தாம நிறைவாம்—அகந்தை
தொலையிற் றனது சொரூபத்துக் கானி
இலைநீ கலங்கா திரு. ௨

237. சீவபோ தத்தையொரு சேர்விடுத் தாற்சேர்வ
தியாவதோ வென்றைய் மெய்துதற்க—மேவுகிளை
கைந்நழுவ விட்டாலிக் காசினியே போலான்ம
மெய்ந்நிலையே சேர்தல் விதி. ௩

238. தவலருமெய் யான்மபதார்த் தத்தையுல குண்மை
இகலுஞ் சுழுத்தி யிடத்தும்—அகமித்தின்
பொய்ப்பாடு காணுந்தன் போத சொரூபத்தின்
மெய்ப்பாட்டா லொப்பல் விதி. ௪

239. யானென்னு மெண்ண மிறையு மெழாவியல்பே
தானென்னு மான்மபர தத்துவமாம்—யானெனுமவ்
வெண்ண மெழாமையால் யாரே யிலராணர்
கண்ணயர்ந்து நின்றக் கண்ட. ரு

240. நானறுமத் தன்மையே நாடுங்காற் பொய்ச்சடமாம்
ஊனமறு தன்மெய் யுணர்வுருவாம்—நானறுமத்
தன்மைக்கட் டானிலனே தாக்கற் றறிதுயிலாம்
உண்மைக்கண் ணடி யுணர். சா

—— :o: ——

## ருக. சுத்தாகந்தைத்திறன்

241. சீவ வகந்தையறச் செத்தா லகண்டான்ம
பாவ வகந்தைப் பரிசொளிரும்—பூவில்
உருத்துழலும் பந்தமா மூத்தையகந் தைபோற்
கிருத்திரிம மன்றக் கிளர்வு. க

242. இயல்பா யிடைவிடா தென்று முளதாய்
மயல்பே யெழுமிதய மாண்பே—செயல்களிடைக்
கத்தத் துவங்கமழாக் காட்சியான் முத்தரது
சுத்தாகங் காரந் துணி. ௨

243. ஊன்வுடலகந்தை யோய்தலாற் பூரணமெய்ஞ்
ஞானமய வாழ்க்கை நடாத்துவோர்—ஊனக்
கவலையறத் தம்மிற் களித்திருப்பர் சித்தச்
சபலமறு சாந்தி தழைத்து. ௩

——:o:——

## ௫௨. ஆன்மவெழுச்சித்திறன்

244. உள்ளமாந் தன்மூல மோர்ந்தாலே நானெனும்பொய்க்
கள்ளமுதல் சாயக் கடவதாம்—கள்ளமாம்
அம்முதல்சாய்ந் தாலே யபரோக்க மாவான்ம
மெய்ம்முதல்வீ றுற்றெழும்பு மேல். ௧

245. அசாவிருள்வாய்த் தோன்றி யகிலமுமா யாடும்
அசார வகப்பே யதனை—உசாவவது
மாப்பிளைத்தோ மூன்போன் மறையமெய் யான்மரவி
மீப்புலனு மாயையிருள் விண்டு. ௨

246. மோனவெளிப் புக்கு முடிந்தவகங் காரமே
ஞானவெளி யாக நடப்பதாம்—ஆனதாற்
பொய்யகந்தை பொய்க்கனுப் போன்மூலம் புக்கொழிய
மெய்யகந்தா னுவெழுமே மேல். ௩

247. உடற்சிலுவை யாங்க ளுடலகந்தை யேசு
உடற்றப்பட் டாங்கே யொழிய—வுடற்சிற
எஞ்சியமெய் யான்மா விறையா யிலங்கலவர்
உஞ்சுயிர்த்து மீட்டுமெழ லோர். ௪

——:o:——

## ௫௫. துக்கநிவிருத்தித்திறன்

248. எதனை மறந்ததனா லிவ்வுலக மாயை
மதனுடைத்தாய்த் தன்னை மயக்கிற்—றதனை
அறிந்தாலே யன்றி யணுவளவுந் துன்பம்
இறந்தொழித லென்ப திலை. ௧

249. தனது மனைமக்கள் சாவுக் கழுவோன்
தனதுநிலை யேதெனத்தற் சார்ந்து—முன்தாத்
தனாஅ துடலகந்தைச் சாவுக் கழவே
தனாதரந்தை முற்றுமறச் சாம். ௨

250. உயிருடலம் பற்றி யுயிர்க்கன்பு செய்யின்
உயிருடலஞ் சாவுறுங்கா லுண்டாம்—துயரறவே
அவ்வுயிரின் மெய்யுருவா மான்மாவைப் பற்றியே
எவ்வமறு மெய்யன் பியற்று. ௩

——:o:——

## ௫௬. நிராசைத்திறன்

251. சார்வதன் முன்மனுத் தானுமா மேருவாய்ச்
சார்ந்தபின் மாறாய்ச் சிறிந்துகல்—கூர்ந்திடலால்
ஆர்தற் கரும்பே ரவாப்போல் யாங்காணும்
தூர்தற் கரும்பாழ்ங் குழி. ௧

252. நிறைவையே நாடியநன் னெஞ்சரே நெஞ்சக்
குறைவாய வந்நல் குரவை—உறுபொருளால்
நீந்திக் கடக்க நினையாமற் சித்தோப
சாந்தி யடைதலே சால்பு. ௨

253. பெருத்தபே ரின்பமென்பர் பேரறிஞர் சித்த
விருத்தி யனைத்தும் விளிவைக்—கருத்தின்
இராகந் துவேஷ மிரண்டு மகன்ற
நிராசையே நல்ல நெறி. ௩

254. பேசாத மோனப் பெரும்பதப்பேற் றாசையுமே
ஆசார மாட்சிக் கயலென்றாற்—றேசிலா
மாசா ருடம்போடு மற்றவற்றின் மேலாசை
ஆசார மாமோ வறை. ௪

255. ஆசாபா சக்கட் டறவறுத்தோர்க் கல்லாது
மாசாருந் தோற்ற மடியாதே—தேசாரும்
பேசா வுபசாந்தப் பேரின்பத் தாசையையும்
கூசா தறுத்தல் குறி. ௫

256. இம்மை மறுமைச்சிற் றின்பமே லாசையாய்
மம்ம ருழந்த மடநெஞ்சே—நிம்மதியாய்
நின்றுனீ யெய்துவாய் நிண்ணயமா யவ்விரண்டை
வென்றாய பேரின்ப வீடு. ௬

—:o:—

ருரு. பந்தமுத்தித்திறன்

257. தேகமகிழ் சீவ சுதந்தரமால்தேய்ந்திறலே
சோகமின்மெய் யான்ம சுதந்தரமாம்—சாகைச்
சமயமெலா வற்றின் சமரசமா யொர்க்க
அமைவதுவா மஃதே யறிவு. க

258. மெத்தவெழுஞ் சித்த விருத்தியையே யல்லாது
பெத்தமெனக் காணுத பேரறிஞர்—எச்சமறச்
செத்த விருத்தியுடைச் சித்தத்தை யல்லாது
முத்தியெனக் காணுர் முறை. உ

(இன்னிசை வெண்பா)

259. மட்டுண்டாற் போன்று மயங்குறு மம்மனமே
கட்டுண்டாற் போன்று கலங்குறுஞ் சீவான்மா
வெஃகி யெனைத்தும் வியவாது நின்றக்கால்
அஃதே பரமான்மா வாம். ௩

—:o:—

ருசு. ஆன்மவிசாரத்திறன்

(நேரிசை வெண்பா)

260. நீயா ரவனு ரெனப்புறத்து நீளமனம்
போயே வினவுமப் போக்கொழிந்தே—ஓயாது
தானுவ லாகத் தனைக்குறித்துத் தன்னகத்து
நானு ரெனக்கேட்கை நன்று. க

261. கள்ளப் புலம்புறத்துக் கிரண்டேபோனு ரென்றுசாஅய்த்
துள்ளு முகந்தைத் துடுக்கறத்தான்—உள்ளத்து
நீடியமெய்ஞ் ஞானபர நிட்டையுற லேயுயிர்க்கு
வீடியல் வாய்க்கும் விதம். ௨

262. மதியைவெளிச் செல்லாது மாற்றித்தன் மூல
இதயமெனு மான்மா விடத்தே—சததமுற
யானென்னும்பா ழெண்ண மெழவொட்டா தூன்றலே
ஆண்ம விசாரத் திடைவு. ௩

263. உள்ளத் துணர்வா யொளிரும் பரம்பொருளை
மெள்ளத் தனித்திருந்து மேவாமற்—பொள்ள
வெளித்தேடி யெங்கும் விசாரித்தல் கீழ்நீர்க்
குளித்தானைத் தீத்தார் இயற்று. ௪

264. பஞ்சகோ சத்துட் புடிந்துள தம் மான்மாவை
நெஞ்சத் தலம்புக்கு நேர்படார்—விஞ்சையா
நூன்முயலுங் கேள்விச்சீர் நூலுசா வல்லான்மற்
றூன்ம விசாரமோ வன்று. ௫

265. மிக்கஞா னன்ம விசாரமாஞ் செந்நெறிவாய்ப்
புக்கார் வழிமாறிப் போதவிலை—அர்க்கனென
நேரிதா மந்த நெறியேதன் னேர்மைபைத்தற்
சாரு மவர்க்குணர்த்துந் தான். ௬

266. சாவசா வேயாய தன்மையா லச்சங்கூர்
சாணவக் கட்டக்கத் தலைப்பட்டார்க்—கோவா
தசாவொழிக்க வேண்டு மவசியத்தா லான்ம
க விசாரணைக்கு வேண்டா விதி. ௭

267. பொழுதிட்டுமுன் னாகப் புலப்படுமெல்லாம்
பழுதுபடா வந்தப் பிரத்தை — ஒழிய
இசையாண்மை யாலவற்றுள் யாமொன் றான்ம
விசாரத்துக் காகா விலக்கு. அ

268. பயிற்சி வயத்தாற் பராமுகமாந் தன்னை
அயர்ச்சியற நானென் றுயும் — முயற்சியாம்
ஆன்மவிசா ரத்தா லகமுகமாக் குஞ்செயலே
தான்மலைதே வாச்ரயத் தம். கூ

269. நினைவெழுந்தோ றந்த நினைவைநின் றவேற்றத்
தினையளவுஞ் சிந்தை செயாதே — அனைய
நினைவுதா னார்க்கு நிகழ்ந்ததென முன்னம்
தனைவிசா ரித்த றகும். க0

270. எனக்கன்றோ தோன்றிற்றிவ் வெண்ணமினி நானார்
எனத்தன்னு ளாழ்ந்துவிசா ரிக்க — மனதும்
தனது பிறப்பிடம்போய்த் தாழு மெழுந்த
நினைவுமே நீங்கி விடும். கக

271. பரிசிதுவா நாளும் பயிலப் பயிலத்
துரிசறலாற் சித்தமிகத் தூய்தாய்த் — தருமசாத்
தொட்டவுட னவ்விதயந் தோயுமா றவ்வளவு
மெத்தவெளி தாகி விடும். கஉ

272. தழலுற்ற கானத் தவிப்பாற்று துய்த்தற்
கெழலுற்ற சென்றுக்க ளென்றே — அழியும்
வளரான்ம சிந்தை வலியாற்று துள்ளம்
கிளர்வா தனையனைத்துங் கெட்டு. கங

273. யானா ரெனக்கருது மெண்ணம் பிறவாய
நானு நினைவு நசிப்பித்துத்—தானும்
சவஞ்சுடுத லுற்றநெடுந் தண்டம்போற் பின்னர்
அவிந்து மூழ்மோன மாம். ௧௪

274. அங்கிசுடப் பெற்ற வயப்பிண்ட மவ்வாற்றால்
அங்கிப் பிழம்பா வதிர்வதுபோற்—றங்குமுறும்
ஆன்மவிசா ராங்கிசுடப் பெற்றவமூக் காருயிரவ்
வான்ம சொரூபமே யாம். ௧௫

275. அசாவாது நாளு மடைவாக வாற்றும்
உசாவர்ய வேதி யுறவாற்—பசாசவுயிர்
சுத்தசிவ மாகத் துலங்கும் பசாசியல்பாம்
சித்த மலக்களிம்பு தீர்ந்து. ௧௬

276. தேவ குமாரனுஞ் சீவன் சொரூபமறந்
தாவவென் றேங்கி யழுங்குந்தான்—யாவனென்றாள்
ஆர்வமொடாய்ந் தார்ந்தாலவ் வான்ம பிதாவொடுதான்
தேர்வனவ னென்றுஞ் சிறப்பு. ௧௭

——:o:——

## ௫௭. மெய்த்தவத்திறன்

277. துன்றா மயல்விகற்பத் தோற்றமெலாந் தன்மயமா
வென்றுவிளங் கான்ம விருத்தியொழுக்—கென்றும்
அவிச்சின்ன மாதலே யாயுங்கா லான்ற
தவச்சின்ன மாகுந் தனித்து. ௧

278. இன்பப் பெருவாரி யெங்கும் பரந்திருக்கத்
துன்பக் கொடுங்கனல்வாய்த் தோய்ந்தழுங்கல்—என்ப
கடமையாச் செய்தவத்தைக் காதலித்துச் செய்யா
மடமையா லாய மயல். ௨

(இன்னிசை வெண்பா)

279. பாய விசும்பிற் பறைநெறியு நீர்வாழ்வ
போய நெறியும் புலப்படா வாறுபோல்
ஆன்மாவை நோக்கி யடைந்தோர்தாஞ் சென்றநெறி
தானும் புலப்படலின்று. ௩

(நேரிசை வெண்பா)

280. உயிர்ச்சேட்டை பொன்று முடையான்றாட் பத்தி
மயச்சேர்க்கை சித்தாந்த மார்க்கம்—உயிர்ப்போதம்
நட்டமா மான்மபர ஞானசொரூ பானந்த
நிட்டைவே தாந்த நெறி. ௪

281. பகுத்தறிவு தன்னாற் பரமோர்ந் தபரத்
தகத்துறவு பூண்ட வடைவால்—அகத்தறவே
யானே டெனதற் றியங்கலே மெய்ஞ்ஞான
வானோடர் வாழ்க்கை வழி. ௫

282. சிரமத்திற் பட்டுழலுஞ் சீவன் சிவத்தோ
டிரமித்தற் கேற்றநெறி கேளாய்—பிரமத்திற்
சிப்பியிடை வெள்ளிபோற் சீவேச் சுரசகங்கள்
கற்பிதமா மென்றே கழி. ௬

—:o:—

## ௫௯. அறிவாராய்ச்சித்திறன்

283. அறிவெனும்பொற் கோயி லகத்தே விசுத்த
அறிவுருவ மாக வரனே—அறிவால்
அறியாநிற் கின்றார்மெய் யாராதிக் கின்றார்
அறிவே பரமார்த்த மாம். ௧

284. பொன்னணிகள் போலப் புலப்பொருள்கள் பற்பலவாம்
என்னினுமப் பொன்னறிவோ ரேகமாம்—பொன்றான்
சிறப்பாய் சுட்டறிவிற் றீர்ந்தொளிருஞ் சித்தத்
திறப்பாய வெற்றறிவே தேர். ௨

285. சுத்தவறி வுண்மைத் துலக்கமொன் றேயுளதாம்
மெய்த்திறமே போல்தன்கண் மேவலுறும்—மற்றை
அறிவனைத்தும் போலி யகக்கற் பிதக்கா
ரறிவவற்றை நம்பலிழுக் காம். ௩

286. சொத்தை யுடலகந்தைச் சுட்டறிவு மோரறிவா
நத்துவரோ மெய்ஞ்ஞான நாட்டமுளோர்—சுத்த
அறிவை யறிவ தறிவாவ தன்றிப்
பிறிதை யறிவதெலாம் பேது. ௪

287. அறியலா காதபல வற்புதநட் பந்தான்
அறிவனு மேனு மவற்றை—அறியும்
அறிவை யறியு மளவுமவ னுண்மை
அறிவனோ வற்கா னறி. ௫

288. வெற்றிகொண்டாற் போன்று விரையு மனமே
பிறிதொன்றி னின்றும் பிறவா—அறிவொன்றே
அல்லாமல் வேறுண்டோ வாய சராசரங்கள்
எல்லாமே தோற்றற் கிடம். ௬

289. எதற்கெடுத்தா லுமறிவை யேயிட னென் றோதும்
அதற்கடுத்த ஞாய மறியின்—உதிக்கும்
அனைத்துக்கு மான்ற நிலைக்களனு மந்தத்
தனக்கு நிலைக்களனுந் தான். ௭

290. அசத்தாஞ் சடத்துக்கே யாலம்ப மாக
விசுத்தசச் சித்தொன்று வேண்டும்—அசுத்தமாம்
சித்த மயலேசச் சித்தாய தான்பிறிதோர்
சித்தை யவாவுந் திறம். ௮

291. அன்னியங்கள் போற்றா னசத்தன்றி யெக்காலும்
தன்னியல்பு சத்தாமத் தன்மையால்—மன்னி
நிகழுமறி வுக்கு நிலைக்களனுந் தானே
திகழவ் வறிவென்ற றோர். ௯

292. அவ்வறிவா மெய்யேநீ யாயிருக்க வவ்வறிவால்
அவ்வறிவே நீயே வமையாமல்—அவ்வறிவாம்
உன்னின் றெழுந்த வுலகியலை யோர்ந்தழிதல்
என்னென் றுரைப்பே னியான். ௧௦

(இன்னிசை வெண்பா)

293. உணரப் படூஉம்பொருட்க ளூற்றொழிய யாவர்க்
குணர்வு தனிலேயுஞ் சற்றுமிலை யந்த
மனித்த வுருச்சமைந்த மண்ணீட்டை ஞானம்
நுனித்துணர்த்த வல்லதோ நூல். ௧௧

(நேரிசை வெண்பா)

294. அறிவோநீ யாக வுனைமந்துள தா லன்றோ
அறியாநின் றயிவ் வகிலம்—அறிவாம்
குறிநிற்கின் ஞான குருவதுவே யாக
அறிவிக்கு முண்மை யறி. ௧௨

295. அயலா மவற்றை யறியப்போ காமெய்
இயல்பா மறிவே யிதயம்—செயல்போம்
அறிவுக்குத் தன்மெய் யவிர்தலா லத்தற்
குறிநிற்கு மஃதே குலா. ௧௩

296. அறிவே யசங்க மறிவே யமலம்
அறிவே கடவு ளணுக்கம்—மறவா
அறிவே யபய மறிவே யமுதம்
அறிவே யனைத்து மறி. ௧௪

——:o:——

## ௫௩. நிர்வாணத்திறன்

297. சற்றுங் கவற்சியறச் சட்டை கழற்றலுடைப்
புற்றரவு போலும் புணர்ப்பினுற்—பற்றும்
அழற்சிசேர் மோகவடி வாம்பஞ்ச கோசக்
கழற்சியே யாற்றல் கடன். ௧

298. ஞானவா னும்மான்ம நாதனருட் பேறுய
மோனவா னந்த முழுதெய்த—மானம்
தருகோச மைந்துந் தணத்தலே சீவ
நிருவாண மென்னு நிலை. ௨

——:o:——

## ௩௦. ஆன்மவடைவுத்திறன்

299. வியசகரூண் யத்துமச் சீரியரூ ஷெஞ்சியூரளிர்
ஆசகச மாந்தன் னநுபவத்தாற்—றோச
உருவவகங் காரமற வோய்தலே யான்ம
சொரூபவடை வென்று துணி. ௧

300. பொய்க்கணுப் பொன்றநணுப் புக்காங் ககந்தையழிந்
தர்க்கநான் மெய்பா யவிர்தலாற்—றக்கஞா
ஞண்மவிசா ரத்தா லகந்தை யழிவதே
ஆன்மவடை வாமென் றறி. ௨

301. பொய்யுலகு தன்னிற் பொருந்திக் கிடப்பினுமே
ஐயுணர்வு நீங்கி யறத்தெளிந்த—மெய்யுணர்வால்
யானென தென்னு மிரண்டு மழிவதே
தானதுவா நிற்குந் தரம். ௩

——:o:——

## ௩௧. திடவறிவுத்திறன்

302. மோன முழுமுதற்கண் முன்னலெழா வாற்றுனும்
ஆனவிட மெண்ணமட்டா மாற்றுனும்—ஏனையிடம்
தன்மை யெழுந்தபின்பே தாமெழூஉ மாற்றுனும்
தன்மையே யாதி யிடம். ௧

303. யானென்ன் றாட்றகணெழல் யாதோ வதேமனமாம்
யானென்னு மவ்வெண்ண மிவ்வுடல்வாய்த்—தானெழுன்முன்
பெவ்விடமென் றுயி னிதயத்தே சேருமதால்
அவ்விடநின் றேமனமுண் டாம். ௨

(கலிவிருத்தம்)

304. உள்ளஞ்சேர் தில்லையுறை யிறைவனடி யுளர்க்கும்
உள்ளலெல்லை யின்கணு முழப்பதக மாகும்
உள்ளலெல்லை கட்குமுத லுற்றவக மாமவ்
வுள்ளலெழு லுற்றவிட முள்ளமென லாமே. ௩

(நேரிசை வெண்பா)

305. இடமாக வுட்செறிந்தார் தம்மையே யல்லால்
இடமாக மற்றெதையு மேற்றார்—படமா
இருந்தொளிர்மெய் யாந்தம் மிடத்துமற் றெல்லாம்
பொருந்தவிடந் தந்தொளிர்விப் பார். ௪

—:o:—

௬௨. சுகநுகர்ச்சித்திறன்

306. இதயத்தி லுன்னையினி தேற்பித்து விட்டால்
உதயமா முண்மை யுணர்ச்சி—அதன்பின்
சதோதயமெய்ஞ் ஞானமார்த் தாண்டனு வாழ்வாய்ச்
சதாசிவசாந் தாநுபவஞ் சார்ந்து. ௧

307. எண்ணியாங் கெண்ணநிறை வேறுமனந் தன்மூலம்
நண்ணியான் மானந்த மேநண்ணும்—மண்ணில்
அனிச்சைக்கே டிச்சைப்பே றின்மனிலை மூர்ச்சை
இனிச்சதுயிற் கும்பொருந்து மீது. ௨

—:o:—

## கூ௰. உறக்கத்திறன்

308. வேற்றாட் பொருளொன் றுமேவா விழுத்துயில்வாய்
ஆற்றப்பே ரின்ப மநுபவித்தோர் — போற்று
துறுதியென வெண்ணி யுறுதுயர்க்குக் கந்தாப்
பிறிதை யவாவுறல் பேது. ௧

309. உறக்கமொடு மூர்ச்சை யொழிந்தபிற வற்றின்
றிறத்துமறி யாமைநனி சேர்தல் — வெறித்த
அகந்தைபறி வுற்ற வயல்விடய மாட்டே
திகழ்ந்திடுமோ னாவினன்று தேர். ௨

310. உறக்கமொரு கோசமா வோதல் விழிப்பைப்
பிறக்கமெனுந் தன்மறதிப் பேதே — சிறக்குமொரு
மெய்த்திறமா மந்த விழிப்பெனல்போ னுறக்கம்
அத்துவிதக் கேவலமெய் யாம். ௩

311. காண்பதின் றுயிற்றுக் கண்டுயில்கா லென்றெண்ணி
மாண்பழிந்து சிந்தை மயங்குறுன் — காண்பவனன்
என்றெண்ணி முன்னை யிரண்டவத்தைக் கண்ணுந்தான்
கன்றியவாங் காரக் கரு. ௪

312. அடியாய மூட வகந்தை யழிவாற்
புடியாய மூன்றும் புலம்ப — முடிவாய்ச்
சகலமற வேதான் சதோதயமாஞ் சுத்தப்
பகலே சிவராத் திரி. ௫

313. சனநனக் கட்குத்தான் காரணமா நின்ற
அனுதிமல வாதனைபோ யற்றால் — இனத
கதிபடரக் கூட்டும்பாழ்ங் கண்ணுறக்க மூட்டம்
அதீததுரி யாவத்தை யாம். ௬

314. இன்பமயங் கோசமா யெய்தல் விழிப்புநிலைக்
கன்பமர்விஞ் ஞானமயற் காதலால்—மொய்ம்புறுமவ்
விஞ்ஞான கோசமறின் மிஞ்சும்பே ரின்பமயம்
அஞ்ஞான கோசவியல் பற்று. எ

315. உறக்கங் கவர்வரைதன் னுண்மை யுணர்ச்சிப்
பிறக்கங் கலங்காமை பெற்றால்—மறக்கமாம்
மைத்துயில்வந் தென்னை மயக்கிற்றே யென்றுள்ளம்
எய்த்தலுற வேண்டா விடைந்து. அ

——:o:——

## ௬௪. மெய்ப்பொருட்டிறன்

316. காணு விடத்துளதாய்க் காணுங்கா லில்லாத
மாணு மனத்தின் மயற்பாம்பு—காணாது
பொன்றுங்கா லீந்து புதையுநிச போதத்தாம்
பொன்றுங்கா லுண்மைப் பொருள். க

317. எவ்விழைவு மின்றி யியங்கு மியல்பினாற்
செவ்விய சிந்தைச் செறிவிலே—எவ்வித
பேதமு மின்றிப் பிறங்குபே ரானந்த
போதமே யுண்மைப் பொருள். உ

——:o:——

## ௬௫. கர்த்தவியக்கழற்சித்திறன்

318. கர்த்தவிய புத்தி கழன்றோர்க்கே யுள்ளூறச்
சுத்தவுப சாந்த சுகந்துலங்கும்—மத்தவுணர்
வாமதுவே யெல்லா வனர்த்தமுந் தான் மேல்விளைப்ப
தாமொருதீ வித்தாக லான். க

319. மயக்கமறு தேய்ந்தசங் கற்பவிகற் பங்கள்
செயற்குரிய வாகச் செய்யாதே—உயிர்க்குயிராம்
ஈசனரு ளெவ்வா றியக்குமவ் வாறியங்கல்
பூசனையி னுண்மைப் புலன். உ

320. சேயை நிகர்த்துறுதி தேறாதே சிற்சத்தித்
தாயைமுன் னிட்டிறைவன் றாளடைந்தோர்—மாயைக்
கறைபடு தேகாகங் காரச் செயன்மாய்ந்
திறைபணி நிற்ற லியைபு. ந

321. சிவன்கருவி யாகநான் சேர்கென்று செம்மைத்
தவங்கருது யோகநிட்டை தானும்—நிவந்தநிலை
ஆன விறைபணியா மான்ம சமர்ப்பணத்துக்
கூன மெனவே யுணர். ச

322. இதயத்தே யீச னிதயமாய் நின்று
விதிவழியே யாவுஞ்செய் விப்பான்—அதனால்
நழுவாது நம்மிடத்து நாமொன்றி நின்றால்
வழுவா தெலாநடக்க வற்று. ரு

323. ஈசனே மூலமா யாவைக்கு மேய்தலால்
ஈசனுக் கர்ப்பிக்கு மெல்லாமே—ஈசனும்
மூலத்தி னின்று முளைத்த வுலகுயிராம்
ஆலமர முற்றுக்கு மாம். சா

——:o:——

## ௩௩. ஆன்மசமர்ப்பணத்திறன்

324. பொருவிலா வீசனடிப் புந்திவலி யாற்றன்
உருவா மகந்தையுணர் வோய்வாற்—றிருவடியிற்
றன்னிழப்பாஞ் சீவ சமர்ப்பணமே காணுங்காற்
பின்றுமைப்பாம் பத்திப் பயன். க

325. ஆண்டவற்கான் மாவை யளிபென்ப ரவ்வான்மா
ஆண்டவன தன்றியய லார்தேர்—ஆண்டவன்பால்
வஞ்சத்தாற் றான்கவர்ந்த மைக்கிரங்கி யாண்டவன்றாட்
கஞ்சத்தேற் பித்தல் கடன். உ

326. ஈச சொரூப மெனுமான்ம சிந்தையாம்
நேசமுறப் பெற்றதன் னெஞ்சின்கண்—வாசனையால்
ஏவியவே றெண்ண மிடம்பெறநல் காமையே
ஆவியையீ சற்களித்த லாம். ௩

327. தானந்த மில்லாச் சருவேசன் சொத்தையது
யானென்று மன்றி யெனதென்றும்—மானங்கொண்
டெண்ணியபி மானங்கொண் டிச்சித்த வச்சூதன்
உண்ணினையி னெங்கே யுளான். ௪

328. பிள்ளையார் தன்னையே பிட்டந்த வெல்லத்தீம்
பிள்ளையார்க் கர்ப்பிக்கும் பெட்பேயாம்—தெள்ளிதாம்
ஆவிவடி வாக வமரிறைக்கு நாமுவந்தவ்
வாவியையே நல்கு மது. ரு

———:o:———

### கூஎ. பகைவர்மீட்டொழுகற்றிறன்

329. எத்துணைதா னேதிலா ரின்னாரே யென்றாலும்
உத்தமர்தஞ் சிந்தை யுவர்ப்புற்றுச் — சற்றும்
வெறுக்கத் தகாது வெறுப்புவிருப் புப்போல்
ஒறுக்கப் படற்கே யுரித்து. க

330. யானன் றெனத்தா னிகழ்வதையே தாமுமிக
ழாநின் றொழுகு மதனாலே — ஊனமில்பொற்
கொல்லற்குப் பட்டடையாங் கொள்கைத்தே கொல்வாற்குப்
பல்லாற்றாற் றாற்றும் பகை. உ

——:o:——

### கூஅ. மிதவாழ்க்கைத்திறன்

331. ஆடம் பரவாழ்வை யாதரஞ்செய் யாதுசில
நீடுந் தனவந்தர் நீக்கினால் — வாடிப்
பரிதபித்துச் சோரும் பலசீவ கோடி
பெருமிதத்து வாழப் பெறும். க

332. ஆண்டவருள் வள்ள லனைத்துயிர்க்கும் வேண்டுவன
வேண்டுமள வானே விளைத்தலால் — ஈண்டுயிர்க்கு
வேண்டளவின் மேற்புசித்தன் மீளிமையா லேனையவற்
றாண்கவர்ந்துண் பாவ முணர். உ

——:o:——

### கூகூ. பணிவுடைமைத்திறன்

333. இறைஞ்சிநடக் கின்ற வியல்பினள வானே
நிறைஞ்சுவரு மாந்தர் நிலைமை — மறந்தும்
மலகுமகங் காரமெழா மாண்பே யிறைவற்
குலகடங்கத் தாழு முயர்வு. க

334. தன்னிழப்பு முற்றச் சமையளவுந் தான்வணக்கம்
அன்னியர்க்கு நல்குலினி தல்லாமே—தன்னதந்தான்
நாட்டிஞ னுக்கந் நமஸ்கார மன்னியர்பாற்
கோட்டலோ வெம்மா கொடிது. ௨

335. ஏவல்பூண் டாற்போன் றெவற்றையுந்தா னெக்காலும்
ஆவலாய்த் தாழ்ந்தொழுகாற் றூலன்றே—யாவுலகும்
ஏற்றமொடு நாளு மியற்றியுயர் பூசனைகட்
கேற்றவனு னுனவ் விறை. ௩

336. தன்னையெவைக் குள்ளுந் தரிசித் தெவைக்குந்தாழ்
தன்னடியார்க் கேயுந்தான் றாழ்ந்தோனுய்த்—தன்னைவிட
நொய்தற்ற தன்னியல்பா நொய்ம்மையுயர் வாலன்றே
எய்திற் றிறைமை யிறைக்கு. ௪

337. அணுவு மகத்துமொருங் காமனத்துக் கப்பால்
அணைவதா லம்மெய் யதீதம்—உணர்வில்
அணையு மகத்தினுமே யால் மகத்தும்
அணுவினுமே சிற்றணுவு மாம். ௫

(இன்னிசை வெண்பா)

338. வீர மிலாத்துரும்பு மேன்மிதப்ப வாழிவாய்ப்
பாரதர ளங்கீழ்ப் படிதலாற்—பாரகத்து
மேலிருந்து மேலல்லார் மேலல்லர் கீழிருந்தும்
கீழல்லார் கீழல் லவர். ௬



இரண்டாவது

# தத்துவ அநுசந்தானவியல்

## க. உபதேசமாட்சித்திறன்

(நேரிசை வெண்பா)

339. நிலைத்தே யுளமுடையா னீதவுரை யன்பர்
மலைத்தே கலங்கு மனம்புன்—புலத்தா
ரெழுகோட்ட மோய்ந்துள் ளூறுகதிக்கு நல்ல
வழிகாட்டி யாக மதி. க

340. அவலோ கனவுரையா லன்பரகத் தான்ம
சிவரூப மாந்தே சிகன்றத்—துவமசியென்
றோயா துரைக்கு முபதேசு சாரமுளத்
தாயா துதியா தறிவு. உ

341. தேவனு மான்மாசற் சீடர்க் குபதேசம்
ஓவலறச் செய்யு முளவென்ப—நீவா
துயிர்க்குயிராய் நானுனென் றுள்ளத்தி னுள்ளே
இயற்கையுணர் வாய விடல்பு. ௩

——:o:——

## உ. மகாவாக்கியத்திறன்

342. மடந்தவிரு மாறு வழங்குபல வார்த்தை
அடர்ந்தமறை நான்க னகத்தும்—கடைந்த
பரமார்த்த பாவம் பரசீ வயிக்க
ஒருவார்த்தை மோன முணர். க

343. வெம்பவசந் தாபத்தின் வீடுறமெய்ஞ் ஞானசுகச்
செம்பொருளை நாடியிந் தீவிரர்க்குத்—தொம்பதமாம்
சீவ சொரூபத்திற் செய்யுமுசா வொன்றுனே
சேர்வதா முத்திச் சிறப்பு. உ

344. அந்த வுசாவுக் கநுகூல மாமதியை
அந்தர் முகப்படுத்தற் காகவே—சிந்தை
ஒசியு மிதரர்க் குறுதற் பதத்தோ
டசிபதமுங் கூறிற் றறி. ௩

345. எதார்த்தமாக் தன்னு ளியற்றப் பெறுதொம்
பதார்த்தபரி சோதனையின் பாங்கே—பதார்த்தபரி
சோதனையா லேனையிரு சொற்களினுர் நற்பொருடேர்
போதமெய்யாத் துய்க்கும் புலம். ச

——:o:——

## ௩. உபநிடமாட்சித்திறன்

346. விஞ்ஞான மென்னும் வெறிபிடித்த வீணகந்தை
அஞ்ஞான மோரா வருளிறைவன்—மெய்ஞ்ஞான
வேதிகைமேற் போதுக்கழன் மேவு முபநிடப்பொற்
பாதுகையேற் பலதே பணி.

——:o:——

## ௪. உபாசனைத்திறன்

347. மாசு படுமசுப வாதனைதா மாய்தலுறத்
தேசுமலி ஞானந் திகழ்வரகத்—தீசன்
பரிசுத்த மாகவொளிர் பங்கயப்பூம் பாதம்
தரிசித்த பாக்கியவந் தர். க

348. அத்துவித ஞான மரிதெனிது மெய்யன்பாம்
பத்தியரன் றாளிற் பதிந்திடின்—வித்தையறத்
தேற்றமொளி யாமெய்த் திருவருளின் சார்புகொண்
டாற்றவெளி தாகு மது. ௨

349. ஈசன் கழலை யிதயத் துறுதிபெற
நேசமா யென்று நிறுத்தியே—பாசமால்
பாற்றலாம் பாற்றிப் பரஞான வுண்மையொளி
தேற்றலா முள்ளந் திறந்து. ௩

350. பூண்டவன்பொய்ப் பாசம் பொடுக்கென் றெறிந்துய்ய
மூண்டவன்பிற் சிந்தை முடுகியே—ஆண்டவன்பொற்
பாதவம் போருகத்தின் பாவனைநீ யெக்காலும்
போதவம்போ காது புரி. ௪

351. என்றுமே நன்னாளா மென்றுமே நற்கோளாம்
என்றுமே மிக்கசுப யோகமாம்—என்றுமே
மங்கலறு தெய்வ வழிபாட்டுக் கேற்றதாம்
பொங்குசுப வோரைப் பொழுது. ௫

—:o:—

## ௫. வாதமயற்றிறன்

352. ஊழொடு றுமுயற்சி யொன்றினீங் கேனையது
தாழப் பெரிதேறத் தக்கதெனக்—காழாய
சொற்போர் தொடுக்குமவர் தோற்ற வொடுக்கநிலை
சற்றுமே தாமறியா தார்.

—:o:—

## சா. அஞ்ஞைவயவலத்திறன்

353. அளப்பரு ஞ்ளனு டீளவே யளவை
அளப்பனவு மெய்ம்பொன் றடைதல்—அளப்பான்
தனைத்தரிசித் துள்ள தனி லற்று லவனே
டனைத்துங்சித் தொக்க விழும்.

——:o:——

## எ. பரோக்கஞானத்திறன்

354. மத்தமன வாதனை தா மாண்டவப ரோக்கான்ம
சுத்தஞா னத்தாற் றெலைவதலால்—மெய்த்தாபம்
கானலினீ ராலே கழியினுயிர்த் தாபமும்பொய்
ஆனபரோக் கத்தா லறும். க

355. சுத்தபர மான்ம சொரூபாநு பூதியாம்
அத்துவித ஞானமப் ரோக்கமாப்—பொய்த்த
பரோக்கவிசே டத்தாற் படைத்துமொழி ஞானம்
இராக்கதநல் லோரென்ற லேய்த்து. உ

356. உள்ள முறு முண்மை யுசாவி லுதிப்பதாம்
கள்ளமயல் போக்குங் கனஞானம்—தெள்ளுகலை
ஏட்டுச் சரக்குசா வின்னடிசிற் காகாத
ஏட்டுச் சுரைக்காயென் றெண். ௩

357. ஓவியமுற் றேங்கெரியா லுண்டிசமைத் துண்டதனல்
ஆவிபசி யாறி யமையுமோ—மேவியகம்
ஓய்ஞானத் தல்லாற்றன் போய்ந்தான்ம சாந்திசுகம்
வாய்ஞானத் தில்லை மதி. ௪

358. மதியையொளிர் வித்தும் மதிக்குளொளிர் தெய்வப்
பதிசொரூப மாகப் பயிலும்—இதயமுறு
போதத்தா லன்றிப் புரணபர மின்மசுகம்
வாதத்தா லென்றும் வராது. ரு

—:o:—

## அ. ஏகசீவத்திறன்

359. ஏகனே சீவ னெனக்கொண் டிதயத்துள்
ஊகமுள தீர னுரைத்திடுக—ஊகம்
மலராத மாந்தர் மனங்கொள்ளச் சீவர்
பலராவ ரென்னவுடன் பட்டு. க

360. பிறந்தார்கள் யாரோ பிறப்புவலை பீறிச்
சிறந்தார்கள் யாரோ சிறக்க—அறிந்தீமின்
ஊனொன்றி நின்றா ரொழிந்தா ருளரேயோ
யானென் றெழாஅ விடத்து. உ

—:o:—

## கூ. அறிவறியாமைத்திறன்

361. ஒன்றன்மே லொன்றை யுறுதியென மேன்மேலும்
சென்றோடி நாடுஞ் செகத்தீரே—ஒன்றாய
எப்பொருளை யாய்ந்தால்வே றெப்பொருளு மின்றாமோ
அப்பொருளை யாய்த லறிவு. க

362. நுட்பப் பொருளை நுனித்துணர வல்லார்க்குத்
திட்பப் பொருளுணர்வாற் சேர்பயனென்—தட்புலனால்
ஆயு மறிவி னழிவிலா வுட்புலனால்
ஆயு மறிவே தலை. உ

363. ஆன்ம சொரூபத்தை யாற்றவுணர்ந் தன்னியத்தைச்
சூனியமாக் கைவிகந்து சோர்தலே—ஞானமாம்
காலமொடு தேயங் கடந்தவுமற் றோர்கருத்தும்
சாலவுணர் வன்றா சதுர். ௩

364. சத்தி விலாசமெதுஞ் சத்தனு மான்மசொரூ
பத்தினும்வே றல்லாமெய்ப் பான்மையாற்—சித்துலகை
வேறுபோ லெண்ணி வெருளுமனப் பான்மையே
மாறுபா டாம்பொய்ம் மயல். ௪

365. உடலேநா னென்னு முணர்வே யொருவற்
கடல்சேரு மோக வவிச்சை—விடலருமெய்
ஆன்மசொரூ பத்தை யகன்றின்றஃ தென்னுமதே
தான்மருவு ஞானச் சதுர். ௫

366. அற்பமதி மாந்த ரபின்னகா யத்தைவெறுங்
கற்பனையாற் பல்வகையாக் காண்டல்போற்—சொற்பால்
அநேகமாக் காண்ட லகண்டேகான் மாவை
விநோதமா மாயை விளைவு. ௬

367. ஆதலா வான்ம சொரூபமா மெய்மைப்பல்
பேதமாக் காண்டலே பேதைமையாம்—ஆதலால்
எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு. ௭

368. பற்பலவாத் தோற்றும் பகிரண்ட மென்றாலும்
உட்பொருளா மெய்ப்பொருளோ வொன்றேகாண்—சுற்றும்
பெருங்குடஞ்சேர் செக்கின்கட் பெய்தபல வெள்ளுட்
பொருந்தியநல் லெண்ணெயே போன்று. ௮

369. இரண்டறுதன் மெய்யீேடர் டிக்கியந்த்வப சாக்ஷம்
திரண்டவேறு முண்மைத் தெளிவால்—இரண்டுற்
றுணர்தலுண ராமையென வுண்மையிலொன் றின்றென்
றுணர்தலே யுண்மை யுணர்வு. கூ

370. உன்னு முணர்வோ டுணராமை யென்றிரண்டு
துன்ன லயல்விடயச் சுட்டிடமே—தன்னியல்பால்
உற்றொளிரு மெய்யி னுருமையா லன்னவிரண்
டற்றதுவே யுண்மை யறிவு. கo

371. தம்மை யறிகவென்ச் சாற்றுவார் சிற்சிலவர்
தம்மை யறியாதார் தாமுளரோ—தம்மை
அறியாமை போலே யறிவுடைமை தானும்
அறியாமை யன்றோ வுறை. கக

———:o:———

## கo. மருட்டிறன்

372. அன்னியத்தைத் தானறிவ தாகினைக்குங் காறுமே
என்னியல்டையானறியே னென்னுமயல்—தன்னியல்பின்
நித்தாப ரோக்கத்தா னீங்கினு லந்நினைவு
பொய்த்தொழியு மந்தப் புலம்பு. க

373. அன்னியமொன் றின்றி யனைத்துமே தானாகும்
தன்னியல்பாம் பூன்றத் தலைப்பாட்டால்—என்னியல்பே
தென்னத்தன் னுள்ளத் தியைபா துணர்வுறாஉம்
பின்னவுணர் வெல்லாம் பிழை. உ

374. மனவெளியின் கண்ணும் மீனக்கற் பனையாற்
கனவெனவந் தெய்துவதோர் காட்சி—எனவே
திடங்கொண்டு சுட்டறிவைச் செற்றுவிட யாசை
மடங்கொன்று நிற்றமேல மாண்பு. ௩

—:o:—

## கக. நனுக்கனுத்திறன்

375. ஞானநாட் டத்தோர் நனுக்கனு நாடுங்கால்
ஊனத் தொருங்கொப்பா வோதுவார்—மான
நனுவுலகு தானு நழுவுவதே யன்றோ
கனுவுலகு போலக் கழன்று. க

376. கனுநனு வென்ப கலங்குற்ற சிந்தை
தனுது படைப்பென்ப சான்றோர்—கனுநனு
என்னு மிரண்டிடத்து மெண்ணமொடு பேருருத்தாம்
துன்னலொருங் கென்றே துணி. உ

377. அகந்தை விரிந்த தரைகுறையா மென்றால்
முகந்தகனுத் தோற்ற முயங்கும்—அகந்தைதான்
முற்ற விரிந்தான் முயங்கு மவிச்சைசேர்
வுற்றநனுத் தோற்ற வுலகு. ௩

378. நனவகத்துப் போலக் கனவகத்துஞ் சேர
மனம்பிறிதோர் தேக மடுக்கும்—நனவுக்
கனுகுணமாங் கன்ம மழிவுற்று மற்றைக்
கனவனுகுங் கன்மமுற்றக் கால். ௪

379. கனவுடலான் மாதைக் கலவிசெயக் கண்டோன்
நனவுடலின் விந்து நழுவல்—வினவிற்
கனவுடலி னின்று கருத்துத்தா னேனோ
நனவுடலிற் பாயும் விசை. ரு

380. தோன்றுங் கனவுவெறுஞ் சிந்தைச் சுழுற்சியெனில்
ஏன்றநனு வும்மவ் வியல்பிற்றே—ஏன்ற
நனவுண்மை யென்ன நடைபெறலக் காலே
கனவுண்மை தானு மது. சு

381. வினுவிடுகேள் விக்கு விடையிறுக்கு மாற்றுற்
கணுநொடியாத் தோன்றிக் கழிய—நனுநெடிதா
மன்னலாக் கூறுமறு மாற்ற மனமாயைத்
துன்னலாற் போந்தவினைச் சூது. எ

382. கற்பகா லத்தைக் கணப்பொழுதா வோர்கணத்தைக்
கற்பமாக் காட்டிக் கலக்குவதே—தப்பாம்
இருட்டுவெளர் சூனியத்துள் யாவையுங்கற் பித்து
மருட்டலுறு மாயமன மாண்பு. அ

383. கனவுலகு காணுந்தற் காணுவஞ் ஞானம்
எனுமயலார் தன்னுய் விசைந்து—பினமாம்
மனோதர்ம மாய்ந்த மனமேமெய்ஞ் ஞான
கனோதயமா மீசனடிக் கண். கூ

—:o:—

## ௧௨. அவத்தாபேதத்திறன்

384. மீதலமா நின்ற விசும்பை விடுத்திதர
பூதமெலா மெய்யாப் பொருந்துமேல்——ஏதமறும்
அத்துரீ யத்துக் கயலா னனுமுதன்மூன்
றொத்தேமெய் யாக வுறும். ௬

385. சுழுத்திமயல் பிறிச் சுடர்துரியந் தோய்ந்தங்
கழுத்தமுற நிற்கலா தார்க்கே——கொழுத்த
முதன்மூன் றவத்தை முபக்கமொடு நாலுந்
ததன்வேறு பாடு மறி. ௭

386. அவத்தையபி மானியுள னுங்காறு மேபல்
அவத்தைபுல னுத லறிவாய்——பவித்த
அவத்தையபி மானி யத்தையாய்த் தற்றால்
அவத்தைவிகற் பங்க ளறும். ௮

——:o:——

## ௧௩. இருவினைத்திறன்

387. யானென் றொருவ னிருக்கின்ற தாவொருவன்
தானினையுங் காறுமத் தன்மையோன்——மான
அகந்தையாற் கன்மமிரண் டாற்றிப் பயனை
முகந்து நுகர்தன் முறை. ௧

388. அகந்தையெனும் பேயை யருங்கர்வ லாவைத்
துகந்தா னுயிருக் குடையோன்——முகந்தவினை
ஊட்டும் பயனெஞ்சா துண்டொழியுங் காறுடலை
நீட்டும் படிக்கு நினைந்து. ௨

389. ஒருவன்முன் செய்த விருவினைக டாமே
மருவு மவனுலக வாழ்விற்—பெருகும்
நலமொடுதீ தாயுமவை நல்குறுநட் போடு
வலியபகை யாயும் வரும். ௩

390. செய்வினையா லெய்துபயன் செவ்விதேற் சாலுமென
எவ்வழியா லேனு மியற்றற்க—அவ்வழியும்
தீதாயிற் றீவினையே சேருநெறி தானுமிகத்
தூய்தாக வேண்டுந் துணி. ௪

391. சித்தத் தமைதியொடு செம்மையாந் தூய்மையொடு
நத்தி நடப்பனவே நல்வினையாம்—சித்தத்
தடரும் பரபரப்போ டாசைபழுக் கோடு
படர்பவெலாந் தீவினையின் பால். ௫

—:o:—

## ௧௪. இரட்டைமுப்புடித்திறன்

392. இலகு மநான்ம விலக்கணமோ வென்னின்
மலகுமிரட் டைக்கிடனு மன்னும்—நிலையில்
புரட்டாய சிந்தைப் புலக்கற் பனையாம்
இரட்டையிலை யான்மா விடத்து. ௧

393. அறிபடுத லெல்லை யறக்கப் படூஉம்
குறியா மிலக்கணங் கூடல்—குறியோ
அளவு படலா மதீதமா மான்மா
அளவு படாஅ தது. ௨

394. தன்னினிரண் டற்றொளிருந், தன்மையா லான்மாவுக்
கன்னியநாட் டந்தரங்சங்கதமாம்—அன்னதாற்
காண்பார்ந் றென்னத்தற் கண்டக்கான் முப்புடிதாம்
சேண்பாயுஞ் சிந்தை திறந்து. ரு

(கலிவிருத்தம்)

395. அறிவுபல வென்பரய லையறி வறிந்தார்
பிறிவுபடு பேதமயல் போர்தலறி யாரே
வெறிவிளையு மையுணர்வை மீட்குமறி வாலே
செறிவுபடு மெய்யறிவு தேறவய லின்றே. சு

—:o:—

## கரு. விடயபோகத்திறன்

(நேரிசை வெண்பா)

396. அயிராணி தன்பா லடைமகவான் போகம்
மயர்சேர் சுணங்கன் மனைமாட்—டியல்பாகத்
தான்மருவு மலதென்றுன் றத்தியங்கா தர்வணான்முன்
ஆன்மபர மாறுப்ப மார்ந்து. க

397. கல்லு முதரக் கடும்பசிக்குக் கஞ்சியொடு
புல்லரிசிக் கூழுமரும் போனகமாம்—தொல்லுலகில்
வேட்கும் விடயவியன் மேற்றன் றதனிடத்து
வேட்கையே யின்ப விளைவு. உ

398. உளதே யுணர்வவ் வுணர்வே மகிழ்வு
களவே யயலாற் களித்தல்—தெளிவாரும்
உண்மையார் தன்னை யொழிகற் பனைவிடயத்
துண்மைமகிழ் வுண்டோ வுரை. ரு

399. வறட்டெலும்பு கவ்வித்தன் வாய்நனிபுண் ணாகப்
பறட்டுப்பற்றட்டென்றதன் புல்லார்த்—துறித்துமிழ்ந்
தென்புபோ லின்சுவைவே றின்றென்னவப் புண்ணீராற்
புன்புலநாய் போற்றும் புகழ்ந்து. ௪

400. அறிவின்பங் கண்டிலா தார்புன் மாதர்
குறியின்ப மாதியாக் கூறும்—பிறிதின்பந்
தன்னை மதித்துத் தடுமாறிச் சாம்பொழுதும்
அந்நினைவா லேங்கியழு வார். ௫

401. எண்ணுக் கடங்காப்பே ரின்பச் செழுங்கனியை
உண்ணுமுயர் நாட்டநனி யுற்றார்க்குக்—கண்ணிழந்த
ஏமரா மாக்களே யெய்தக் கடவதாம்
காமருசிற் றின்பங் கடை. ௬

402. உண்கின்ற தோறுமவ் வுண்டியே தம்முயிரை
உண்கின்ற வுண்மை யுணராரே—மண்ணிற்
புசிக்கப் படுவதாப் போகத்தை யெண்ணிப்
பசித்துப்பின் பற்றுபவர். ௭

403. நிமிர்ந்தெழுத லன்றி நெருப்புநெய் யாலே
அமர்ந்துதணி வெய்தாத வாறே—சமைந்ததம்
காமங்க கூடுங் களிப்பானே காமத்தீ
ஏமங் கொடுதணித லின்று. ௮

404. தீண்டலா லொன்றே செகுத்தலுயிர் தேருங்காற்
காண்டலான் மற்றுங் கருதலால்—மாண்டிடச்செய்
ஐவாய வேட்கை யராப்போல யாங்காணேம்
பைவாய் பாம்பிற் பழுது. ௯

—:o:—

## கசு. மனமாலயத்திறன்

405. உள்ளதே பூண்ற வுணர்வா முளமென்றாற்
கள்ளமே யன்றோ கனமாயை—கள்ளமாம்
அந்தமன மாயை யராத்தீண்ட லாலென்ன
விந்தையுயிர் மாழ்கும் விதம்.

——:o:——

## கஎ. பேதைமைத்திறன்

406. தாமதுவா ஞானச் சதுரரைக்கண் டத்துவிதம
ஆமதுவே லற்றலச ஞதியெவன்—ஓர்மென்
றுடனுணர்வோ ரான்ற வுணர்வுரைப்பார் போற்றம்
சடவுணர்வு சாற்றுவார் தாம். க

407. கண்ணுலந் தானே கலவி யநுபவமா
எண்ணுநின் ஞேர்பேதை யின்புறுவாள்—உண்ணுடி
உய்த்துணர்த லில்லா ருளறுவாய் வேதாந்தம்
அத்துவித ஞானமென் பார். உ

408. சாத்திரத்தா லான்மபர தத்துவங்கேட் டான்றமதி
மாத்திரத்தாற் றம்மை மதித்தோராய்—ஓர்த்ததமைச்
சோதனைசெய் தோய்ந்துசுகந் தோயாதம் மோனியரைச்
சோதனைசெய் பேதைமையென் சொல். ங

409. தம்மை யறியுந் தரமுமே யில்லாதார்
அம்மையோ டும்மை யமைதிகளைச்—சும்மையாய்ப்
பாவித் தறிதல் பசுங்குழவி தன்னிழலைத்
தாவிப் பிடிக்குந் தகைத்து. ச

410. நடுநாளே தந்நிலையை நாட்டரியா தாற்றத்
தடுமாறும் புந்தியார் தாமே—முடியேநு
டிநாளுந் தங்க ளவத்தைகளை யெண்ணி
நெடிதாக நிண்ணயிப் பார். ரு

411. இன்றுநா மெவ்வா றிருக்கின்றோ மென்றுணர
நன்றுதாஞ் சற்று நயக்கலார்—பொன்றுவதன்
பின்னும் பிறந்ததன் மூன்னுமுள தம்முண்மை
உன்னியுழல் வாருணர்வென் னோ. ௬

:o:

## கஅ. பிரமாதத்திறன்

412. அற்புதமா யுள்ளசிற் றம்பலமாந் தந்நிலையில்
உற்பவமாய்ச் சீவித் தொடுங்குகனுக்—கற்பிதமே
தந்த மிருவினையாற் றாக்குண் டுழல்கின்ற
இந்த விவகா ரிகள். க

413. அச்சமறு மான்மநிலை தன்னி னகன்றன்றோ
துச்சவுயி ராய்ப்பிறவித் துன்புற்றார்—உச்சந்
தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையி னிழிந்தக் கடை. உ

414. மலையிலக்கா நின்ற மகிமைசா லான்ம
நிலையினைக்கண் டந்நிலைக்கே நில்லா—தலைவதுதான்
தன்னைத் தவிர்ந்தோரைத் தானெண்ணி மூலமாம்
தன்னை மறந்த தகைத்து. ௩

415. மோனையர் யுள்ள முழுமுதலாய்த் தாமிருந்தால்
ஏனையார் தம்மா லிழிவடைதல்—ஏனோ
தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையி னிழிந்தக் கடை. ௪

——:o:——

## க௯. சம்சாரத்திறன்

416. உண்மையிலே தானலதின் றேனுமுட லேதானு
உண்மயலா லெண்ணு முயக்கமே—திண்மையாம்
அத்துவிதா னந்த வமுதத் துவங்கழன்று
செத்துப் பிறக்குந் திறம்.

——:o:——

## ௨0. ப்ரதிபந்தத்திறன்

417. இடியேறு போற்பல் விடையூறு செம்மா
ணடியாரை யாற்ற வடர்த்தல்—ஒடியா
நிலைநிறுத்தற் கன்றியந் நின்மலர்தந் நெஞ்சை
உலைவுறுத்தற் கன்றென் றுணர். க

418. மேதகுதன் னெஞ்சம் விதிராதே யூழாற்சேர்
நோதகவு முற்றுந்தா னேன்றிடுக—நீதவுயிர்க்
குய்வைத் தரவஃ துளத்தை யுரம்பெறுத்தும்
தெய்வத் திருவருளாத் தேர்ந்து. ௨

419. கடைவா லல்துசுரங் கத்துமணி சோலை
படையாத வந்தப் பரிசே—தடையாய
சோதனையா லன்றிச் சுடரா தொருவன்செய்
சாதனையா முண்மைத் தவம். ௩

420. உருள்பெருந்தேர் வீதிவழி யோடிநிலை சேரம்
அரியவச்சாணியே யன்றி—இருமருங்கும்
சென்றாமடுக் காததடை செய்ம்முட்டுக் கட்டையுந்தான்
இன்றி யமையாத தே.

——:0:——

## உக. மாயாவிசித்திரத்திறன்

421. ஒன்றே பலவாக வுற்பவியா துற்பவித்து
நன்றோடு தீது நயந்தாற்போற்—றொன்றுதி
இன்றளவு மென்றுநா லேழ்பிறப்பு மெய்திமுத்தி
வென்றடைவ தென்ன வியப்பு. க

422. தானதுவா யென்றுந் தனித்திருந்தே தானதனை
ஏனையது போலே யிசைந்திடுதற்—கான்முறை
மேற்கொண் டுண்முக்கூ மிறைபோலே காணுங்கால்
ஏற்குமிறும் பூதொன் றிலை. உ

——:0:——

## உஉ. ஆணவநவைத்திறன்

(கலிவிருத்தம்)

423. ஆணவ மாமலவ் வருநர காட்சி
பேண வொணாத பெரும்பிழை யாகும்
காண வொணாவக் கலிபுரு டன்முகம்
வீணர்க ளன்றி வெறுதவர் யாரே.

——:0:——

## உரு. துக்கோற்பத்தித்திறன்

(நேசிகை வேண்டா)

424. இன்பமய மூர்ந்தன் னியல்வேறாய்த் தான்பிறவித்
துன்பவெயி லாலே துடிப்பதெலாம்—வம்பால்
அறிவு தொழிற்பட் டலமருமா மோக
வெறிசே ரகந்தை விளைவு. க

425. ஆசுரசம் பத்துக் கடிப்படைதே கத்தோடு
காசுறுசம் பந்தவகங் காரமே—பாச
மமதையுற வாற்கொழுக்கு மாயவகங் காரர்
அமைதியுற லம்மா வரிது. உ

———:o:———

## உசா. ஜீவபோதத்திறன்

426. வேனில்வா யோடி வெதும்புவதுந் தண்ணிழல்வாய்த்
தானெபதி வெப்பந் தணிவதும்போல்—ஈனவுயிர்
இவ்வுலகத் தோடி யிளைப்பதுமீண் டுண்ணடி
அவ்விதயத் தாறுவது மாம். க

427. வேனிலெறி யுண்ட விவேகி நிழல்விட்டு
வேனிலுற மீளா விதம்போல—வேனில்
உலகடுமுத் தாபமுழந் தோரு முளம்விட்
டுலகடைய மீள வொணாது. உ

428. உண்மைப் பொருளி னுதித்த வுடலுயிரவ்
வுண்மைப் பொருளி னொடுங்களவும்—திண்ணமாய்
எத்தடைக்கு நில்லா திருவிசும்பிற் சேர்பறவைக்
கித்தரைக்க ணன்றிநிலை யின்றாம். ந

429. வந்த வழியே மறித்துயிர்மூ லம்புக்காற்
சொந்த சொரூபமுறத் தோய்தலாந்—புந்திக்கச்
சொர்ச்சொருபா னந்தந் துளங்கி விளங்கவே
நிச்சலமா நிற்கு நிலை. ௪

—:o:—

## ௨௫. சுட்டுணர்வுத்திறன்

430. சும்மா விருக்கத் துலங்கும்பே ரின்பத்தாக்
கம்மாதா னுற்ற வலைந்திடுதல்—செம்மாப்பப்
போக்குவர வில்லாப் பொருளாகத் தன்னையாய்ந்
தூக்கமிகு மின்ப முறற்கு. ௧

431. தானேதா னாகச் சமைந்திருக்க வன்னியம்போற்
றானே தனைத்தேடிச் சார்ந்திடுதல்—தானேதில்
அன்னியம்போற் றோன்றிடினு மத்தா னனனியமென்
றன்னியுணர் வோய்ந்து விடற்கு. ௨

432. தன்னையே யல்லால்வே றாகாத தத்துவத்தைத்
தன்னிலே வேறாகத் தானினைந்து—தன்னுளுற்றால்
உற்றிடுவான் வேண்டி யுழைத்திடுதல் தன்னிழலைப்
பற்றிடுவா னோடிவிட் டற்று. ௩

433. கலையனைத்துங் கேள்வியொடு கற்றுணர்ந்துங் கேட்டும்
நிலையனைத்துந் தேராது நேடி—அலையன்மின்
அற்பே வடிவா வமர்ந்த பொருண்மயமாய்
நிற்பே பரம நிலை. ௪

—:o:—

## உகூ. சுட்டறுத்தற்றிறன்

434. சுட்டறிவு நோக்கத் துலங்கா வருள்விளக்கம்
சுட்டறிவு கெட்டோர்ற் றுலங்குவதாம்—பெட்டுமிக
யானோக்குங் காலை நிலனோக்கு நோக்காக்காற்
றானோக்கி மெல்ல நகும். க

435. ஆர்வமொடு தன்னையடிக் கர்ப்பணஞ்செய் தால்வெளியாம்
தேவனரு ளாலே தெரிவதலாற்—சீவ
மதியூக்கங் கொண்டு மதித்துணர லாகா
அதிருக் குமமெய் யறி. உ

436. யாதோர் நிபந்தனையு மில்லாதே நும்மனத்தை
மாதோர்பா கன்பதத்தில் வைத்திடீர்—சூதோரும்
யானெனது மாய வெழில்சேர் பரசொருபம்
தானினிது ளோங்குந் தழைத்து. ங

—:o:—

## உஎ. அன்புண்மைத்திறன்

437. ஏழா வதுருசியா வெண்ணுவார் மற்றெதற்கும்
தாழாத வார்வருசி தாமுணரார்—ஊழானே
பேதருசி யாய பிறருசிக்குப் பெட்பளிக்கும்
ஆதிருசி யாகுமவ் வன்பு. க

438. நன்சுவையே யென்ன நவில்வார் நவிலருமன்
பின்சுவைதாந் தேறாத வேழையார்—நன்சுவையாம்
அன்புருசி நன்கறிந்தோ மாதலினவ் வொன்றேதான்
இன்பருசி யென்போ மியாம். உ

439. அன்புண்மை தன்னையறிந்தாலே வாழ்வினது
மொய்ம்புடைய சிக்கின் முடிச்சவிழும்—அன்பினது
மேதகவு சேர்ந்தாலே வீடுபெறு மெய்தியதாம்
ஓதுச்சம யத்தி னுள்ளம். ௩

440. தெள்ளியமெய்ஞ் ஞானத் திருவினைச்சேர் வார்மெய்யன்
புள்ளங் கொளவேண்டு முண்மையே—விள்ளுவதாம்
கையுறையோ டன்றிவெறுங் கையொடுகா ணற்கவென
மெய்யுறுசான் றோர்சொல் விதி. ௪

441. அன்பை யடக்கலா லொன்றோ விபரீத
வம்பினு லத்தை வழங்கலாற்—றுன்பம்
எனப்படுவ யாவற்று லேயுமுயிர் பற்றித்
தினப்படுவ தாகுஞ் செறுத்து. ௫

442. அன்பையே காண்பதா யன்பையே கேட்பதாய்
அன்பையே தானுற் றறிவதாய்—இன்பமாம்
அன்பையே யுண்பதா யன்பையே மோப்பதாம்
அன்பேயான் மாநு பவம். ௬

———:o:———

## உ௨. சகளத்திறன்

443. உருவவகங் கார மொழிந்தமனத் தோர்க்கே
அருவவழி பாடியல்வ தாகும்—மருவும்
உருவவகங் காரமனத் தோர்வழிபா டெல்லாம்
உருவவழி பாடே யுணர். ௧

444. நிலையா நினைவாலே நீட்கிளமா முண்மை
தலையாரா யித்தலே சால்பாம்—முனைவன்
அகளவழி பாட்டுக் கருகதையில் லாக்காற்
சகளவழி பாடே தகும். உ

445. இயற்கையொளி யார்தம் மிருக்கையுணர் வின்றி
மயக்கவினைப் பட்டுழலு மாந்தர்—நயக்குறுந்தம்
மூர்த்தி யுபாசனையான் மோகமொழிந் தான்மபா
மார்த்த மடைவா ரறி. ந

446. அகத்தும் புறத்து மரன்சகள பூசை
நிகழ்த்துசிவ நேயமுறு நெஞ்சே—மிகுத்துணர்வாய்
எல்லா விடத்து மிறைவ னிருப்புமறப்
பில்லா வுணர்வோ டியற்று. ச

447. சிவயோகி தன்னைப்பா சித்தொழுக நாளும்
பவரோக மாயம் பறக்கும்—அவதானம்
ஒன்றேயா யுள்ளத் துசாவுதித்து வெற்றுணர்வாய்
நின்றேயான் மாவி னிலைத்து. ரு

448. இறைவனடிக் குண்மையா மேகாந்த நேயம்
குறைவறநிற் கலைத்து கொடாதேல்—மறையின்
இழைத்தவிதி கோடா தியற்றுமது நட்டானத்
துழைப்புமுழு தும்பா ழுணர். சு

449. அல்லாவை நாளு மடிதொழுவா ரின்பஞ்சேர்
எல்லா நலனுமொருங் கெய்துவார்—பொல்லாப்
பழிபாவத் தாலே பரிதபிக்குஞ் சிந்தைத்
தழல்வாழ் வுபசமனஞ் சார்ந்து. எ

450. மறுமையோ டிம்மை மறந்திடையூ றெல்லாம்
பொறுமையொடு சாலப் பொறுத்து—வறுமை
எதுவரினுஞ் சற்று மிளகாது நெஞ்சம்
பதியருளின் பாங்கே பயில்.

451. குல்வுமரன் பாதங் குறிக்கொண்டு விரும்
தலைமைதரு சாது சனத்தோர்க்—குலக
அரங்கத் தழுக்காற்றுக் காளா தலின்மிக்
கிரங்கற்கா ளாகை யினிது.

——: 0: ——

௨௬. அரியரவபேதத்திறன்

452. ஞான முயிர்த்தொகைக்கு நல்க லரனுக
வானம் வழங்க லரியென்பர்—ஞான
உரனே பரனு வொளிர்விசும்பா மொன்றே
அரனே டரியென் றறி.

——: 0: ——

௩௦. பஞ்சகிருத்தியத்திறன்

453. இட்டமா யீச னியற்றுஞ் செயலைந்தும்
சட்டமா யொவ்வோர் சராசரத்தும்—திட்டமாய்
ஒவ்வோர் கணமு மொழியாது நாளுளும்
செவ்வே நடக்குமெனத் தேர்.

454. ஒவ்வோ ரணுவு மொழிந்தவுட னுக்குடன்மற்
றெவ்வோ ரணுப்புதிதா யுண்டாமால்—இவ்வா
றிடைவிடா தேய்தலால் யாவுமவை யேயா
நடைபெறுதல் போல்வனவா நாடு.

——: 0: ——

## ௱௧. ஜீவேச்சுரசிட்டித்திறன்

455. தேவனது சிட்டிபந் திப்பதன்று ஜீவனுனே
பாவனையாஞ் சிட்டியே பந்தமாம்—நாவலோ
செத்தமகன் றந்தைமகிழ் சேர் வுயிர்த்தமகற்
கத்தனழல் சானறு மதற்கு. க

456. போதகுரு தன்னைப் புலப்படுத்தி வாதனையாம்
ஏதமறு ஞானநிட்டைக் கேதுவாம்—ஆதலால்
நீடுமரன் சிட்டி நிகழ்ச்சிமுறை முத்திபெறக்
கூடுமது கூலங் குறி. உ

——:o:——

## ௱௨. நேதிசெயற்றிறன்

457. ஊன வுடல முயிர்பொறிக ளுள்ளம்விஞ்
ஞானமகங் காரமுமே நானல்லேன்—ஆன
செயல்விடயந் தீர்ந்து செறிவா தனைசேர்
மயல்வடிவு மல்லேனுன் மற்று. க

458. மெய்யாய வென்னோடு மேவாக்கா லிவ்வனைத்தும்
பொய்யாகப் போந்து புலம்பலால்—மெய்க்கயலாய்
உள்ளவுணர் வொன்றுமிலா வுண்மையாற் பொய்ம்மடமென்
றெள்ளுமிவை யாவுமலேன் யான். உ

459. அவற்றையக மாகவபி மானித்த வாதித்
தவற்றைவிவே கத்தாற் றடிந்து—கவற்றல்க
ஊனமுராத் துனைத்தேர்த் தாகத் தனித்தொளிர்மெய்ஞ்
ஞான சொரூபமே நான். ௩

——:o:——

## ௯௩. துறவுமாட்சித்திறன்

460. நானென்னுந் தும் விட்டு நழுவின்றே னென்றாளுத்துட்
டானினைத்த றன்னிற் றலைத்துறவதும் — ஊனைக்
குடும்பமாம் பந்தத்துட் கோத்தோனுந் தன்னை
உடம்பளவா வுன்னுமை யோனர்.

—:o:—

## ௯௪. நிருவாதனைத்திறன்

461. வேளைக்கு வேளையெனல் விட்டு நிரந்தரமா
நீளச் செயுமான்ம நிட்டையால் — மூளை
யுழித்தரா தார்வா தனையுநோ மத்தை
மழித்தலே முண்டன மாண்பு. ௧

462. உள்ளங்க ளுள்ளே யுறத்தைத் துடற்றாங்கூர்
முள்ளின் பகைகீண்ட முட்போல — உள்ளத்
தசுத்த நினைவை யகழ்ந்ததற்பின் பந்த
விசுத்த நினைவும் மிகை. ௨

463. குலவுசுப வாதனையாற் கூடுமது கூலம்
மலவசுப வாதனைமாய் மட்டே — மலியும்
இருவா தனையு மிறந்தபரி சுத்த
நிருவா தனையே நிலை. ௩

—:o:—

## ௫௫. உபவாசவுண்மைத்திறன்

464. நள்ளாமே போக நசையாதுந் தன்மனத்தால்
விள்ளாமே யான்மவிட்டை மேவலே—தெள்ளியோர்
உண்ணா விரத வுபவாசத் துண்மையெனக்
கண்ணாநின் றுசரிப்பர் காண்.

—:o:—

## ௫௬. ஆகாரநியமத்திறன்

465. ஆதிகுண மேம்படலா லான்மவிசா ரத்துக்கு
நீதமா முண்டி நெடுந்துணையாம்—ஆதலால்
ஏனை கலங்கித்தா மேங்க லுணாநியமம்
தானேயுஞ் சாலுந் தகைத்து.

—:o:—

## ௫௭. தூய்தன்மைத்திறன்

466. உறுத்த வுறுத்தமல் லூனுடற்குத் தூய்மை
மறித்துமறித் தும்மலமே வாய்தல்—குறித்து
வெறுத்துடல வேட்கையற வீடற்கே நால்வற்
புறுத்துவது தூய்மை யுடற்கு. க

467. மாதொருத்தி தன்னை மணக்கொளலப் புன்போக
மீதருத்தி விட்டொழிகை மேற்றன்றே—வேதம்
சொலான்மகத்தை யேத்துவிதி சொர்க்காதி போகம்
எலாமுவர்த்தற் கன்றே வியம்பு. உ

468. தூய வுணவையெலாந் தோய்ந்த சிறுபொழுதிற்
றீயமல மாகச் செயுந்தேகம்—ஆயபாழ்
ஊத்தைமலந் தாமா வுவப்பார் மலந்தின்னும்
பாழ்த்த விலங்குதனிற் பாழ். ௩

(குறள் வெண்பா)

(5) தின்றமல மாக்குமல் தேதோகர் பவ்வி தின்
பன்றியினுங் கேடாப் பகர்.

—பகவான்

——:o:——

௬௯. நிட்காமியத்திறன்

(நேரிசை வெண்பா)

469. கோரிக்கை முன்னிட்டுக் கொண்டிறையைக் கும்பிடலக்
கோரிக்கை தன்னையே கும்பிடலாம்—கோரிக்கை
எண்ணமற மாய்வதுமுன் னின்றியமை யாதுசிவ
வண்ணமுற வெண்ணு மனத்து. க

470. உயிர்க்குறுதி யாற்று முயர்தவத்தைச் சற்றும்
மயக்கிறுதி யாக்கவிட மாட்டார்—மயக்கமர
வாழ்வுக்குக் காமியஞ்செய் வார்செயல்செம் மாமணியைக்
கூழுக்கு மாறல் குறி. உ

——:o:——

௭௰. கரணதண்டத்திறன்

471. உள்ளும் புறமு முளவாங் கரணங்கள்
அல்லும் பகலு மடங்கினல்— விள்ளும்
சொலப்படுத லாகாத் துரிய நிலைக்கே
புலப்படுத லாகும் பொருள்.

——:o:——

## ௪௰. கருணஜபத்திறன்

472. பூத வுடலந்தை யொன்றலா லவ்வுடன்மேற்
பூதங்க ளாலே பொருந்துபவாம் — ஏதங்கள்
உள்ளதன்மேற் கொள்ளா துதாசீன மாயவற்றைத்
தள்ளுதலே பூத சயம். ௧

473. சித்தநா னென்றுழலுஞ் சிந்தைபோய்ச் சேர்விகற்ப
புத்திமா றட்டமறப் பொன்றலாற் — பெத்தமொடு
முத்தியுணர் வற்று முயங்குதிட ஞானன்ம
சித்தியுறல் சித்த சயம். ௨

:o:

## ௪௧. ஆதனத்திறன்

474. மீதலமெய்ஞ் ஞான விசும்பாய தன்னையே
ஆதனமாச் சார்ந்த தசலமெனும் — போதம்
நலியா துரம்பெறலே நல்லசமா திக்குச்
சலியாத் திரவா தனம்.

:o:

## ௪௨. யோகவலித்திறன்

475. முன்னேதான் செய்த முயற்சியே பக்குவத்தாற்
பின்னேதா னூழுருவாப் பேர்தலால் — முன்னதனை
ஆற்றியதனாலே யரிதுமுயன் றவ்வூழை
மாற்றலும்மா மென்றே மதி. ௧

476. எந்தநற் றீவினைக ளின்பமொடு துன்பமாந்
தந்தம் பயனைத் தருகினுமே — சொந்த
சொருபமாஞ் செம்பொருளைத் தோய்ந்தமனத் தாலவ்
விருவினையின் கொற்றமுநீ யெற்று. ௨

477. எனைத்தானு முன்டளவும் பூரன்பாவி யென்னி
எனைத்தானு மெண்ணித் தூங்கேன்ங்கர்—தனைத்தானும்
ஊக்கமொடு சொர்ச்சொருபத் தின்மூழ்கு வார்விரைவிற்
றேக்குவா ரின்பந் திளைத்து. ௩

478. தடைபடா தெங்குந் தழைத்திரு வானித்
தடைபடாச் சிற்றம் பலத்தை—இடைவிடா
தெண்ணுறுவார்க் கூழ்வினையின் றெட்டுணையு மென்றதே
விண்ணுறுவார்க் கில்லை விதி. ௪

479. மாறும லூன மனத்தை மறுகலுறச்
சூறு வளியாய்ச் சுழற்றுமூழ்—தேறும்
விசுத்தவெளி யாக விளங்கு மனத்தை
அசைக்கவல தாகா தறி. ௫

480. கன்மக் கடலடிக்கே யாழ்த்துங்கர்த் தத்துவமாம்
தன்மதியைச் சுட்டெரிக்குஞ் சூழ்ச்சிதான்—தன்மயமாய்த்
தன்னகண்டா கார சொருபத் தியானமலா
தென்னகண்டாய் நெஞ்சே யியம்பு. ௬

—:o:—

## ௪௬. உயிரோருக்கத்திறன்

481. இருத்த லிலகுத லின்பாத ஞமம்
உருமயமாத் தோற்று முலகின்—உருநாமம்
தீரவிடல் ரேசகஞ்சற் சிற்சுகத்தைத் தேர்தனிலை
பூரகங் கும்பகமாப் புல். ௧

(இன்னிசை வெண்பா)

482. ஆகமக மன்றென் றுறவிடலே ரேசகமற்
றாகமொடு நானாரென் றுட்செறிவே பூரகமற்
றேகமாய் நானதுவென் றெய்தலே கும்பகமென்
றாக வுயிரொருக்க மாம். ௨

(நேரிசை வெண்பா)

483. மனோமயனாத் தன்னை மயங்கித் திரிவோன்
கனாமயலாங் காட்சி கடிந்து—தனாஅ
துயிர்நிலைக்கே புக்கவ் வுயிராய் நிலைப்பே
உயிரொருக்க வுண்மை யுணர். ௩

——:o:——

சச. கன்மரகசியத்திறன்

(6) வினையும் விபத்தி வியோகமுஞ் ஞானம்
இனையவையார்க் கென்றாய்ந் திடலே—
வினைபத்தி
யோகமுணர் வாய்ந்திடநா னின்றியவை
யென்றுயில்தான்
ஆகமன லேயுண்மை யாம். ௧

—பகவான்

484. கன்மமியற் றத்தொடங்குங் கத்தனா னாரென்னத்
தன்மையறி வேகன்ம தத்துவமாம்—கன்மமுதல்
ஆந்தன்னை யாய்ந்தறிந்தற் றாலன்றிக் கன்மமுடி
வார்ந்தவுப சாந்த மரிது. ௨

485. கத்தனுந் தன்னுண்மை கண்டோனே கன்மவிதி
அத்தனையு மொன்றொழியா தாற்றினேன்—நித்தமுஞ்செய்
கன்மா றுட் டானக் கடுந்தவத்தாற் காண்பயன்பே
ரின்பவ்பு சாந்தமலா தென். ௩

—:o:—

## சரு. ஜபத்திறன்

(குறள் வெண்பா)

(7). ஞானத்து ளொன்றுந் தானமுற்றார் வாக்பரையார்
தானந்தேர் தல்சபத்திற் சால்பு. ௧

—பகவான்

(நேரிசை வெண்பா)

486. யானென் றெழுமிடமே தென்னத்தந் நுண்ணறிவாம்
மோனத்தா லுண்மூழ்க மாட்டார்தார்—மானதத்தாற்
பண்ணுஞ் செபத்திற் பராவாக்கு யாண்டிருந்து
நண்ணுமென் றுய்த் னலம். ௨

487. நீயே செபவடிவா நிற்றலா லுன்னியல்பை
நீயா ரெனவினவி நிச்சயித்தால்—ஏயே
முயற்சியுற லின்றி முனைந்தசெப முள்ளத்
தயர்ச்சியற மேவு மறி. ௩

(இன்னிசை வெண்பா)

488. விடயங்கத் தாவில் விளியுங்கா றுன்ம
திடவுண்மை யிற்றெனத்தான் றேருங்கா றந்த
இறைநா னிறைநா னெனவாளா வாயாற்
பறைதலா லென்னோ பயன். ௪

(நேரிசை வெண்பா)

489. யானே பரமென் றியம்பித் திரியாமல்
தானே பரமாத் தரித்திடுக—தானதுவாய்
நிற்றலா லன்றி நெடுங்குரலாற் பற்பலகாற்
சொற்றதனாற் போமோ துயர். ௫

490. அருந்தலா லன்றி யரும்பிணிகள் சற்றும்
மருந்துநா மத்தாலே மாயா—பொருந்து
சிவோக முதற்பல் செபத்தாலே மட்டும்
தவாதே பிறவித் தளை. ௬

——:o:——

௪௯. திருநாமத்திறன்

491. உள்ளமெனு மெய்ப்பொருடா னுள்ளத்தினின் றுணர்வாய்
மெள்ளவெளி வந்து விரியுங்கால்—உள்ளபொருட்
கானவபி தானம்பல் லாயிரத்து ளாயுங்கால்
நானென்ப தேமுதலா நாடு. ௧

492. முதன்மை யுறுபெயரா முன்சொனவவ் யானே
டதன்மெய்ப் பொருள்விளக்க மாக—நிதநான்
இருக்கின்றே னென்ன வியைதலா லந்த
இருக்கின்றே னென்பெயரு மாம். ௨

493. இந்தப்பேர் போலா யிரக்கணக்காம் பல்பெயருள்
எந்தப்பே ரும்முண்மை யேற்புடைத்தாய்ச்—சிந்தை
கழிய வுளஞ்சேர் கடவுட்கு மெய்ம்மை
அழகு பெறவமைந்த தன்று. ௩

494. அகமுகநாட் டத்தோர்க் கறிபடும்யா வற்றும்
அகமகமென் றுண்டான் மெய்யதே—அகந்தையழி
வானவித யாகாயத் தார்ந்து முழுங்குமே
மோனபரா வாக்கீாய் முனைந்து. ௪

495. நானு னெனவகத்து நாட்டமா யப்பேரை
ஆனு தநுசந்தித் தாலுமே—ஊனூர்
கருவகந்தை மாயுக் கருத்துதிக்கு மூலத்
தொருவனைக்கொண் டுய்த்து விடும். ௫

496. நானென் றுரைக்கு நவிற்சிக்கு நேர்பொருளாம்
ஊனுயிர் தான்றோன்றி யொடுங்கலால்—ஊனுயிருக்
கார்ந்தவதிட் டானமா மான்மாவே யாயுங்காற்
றீர்ந்தபொரு ளாகத் தெளி. ௬

—:o:—

## சஎ. பத்திமைத்திறன்

497. சொற்பதமாந் தொம்பொருளாய்ச் சூனியமாந் தன்னையொளிர்
தற்பதமா நின்ற சதாசிவமாம்—சிற்பதத்தே
ஆன்வுப் சாந்த வசிபதத்தான் மாய்க்கும்பு
மானே சிறந்தபத்தி மான். ௧

498. நீர்க்குமிழி போன்ற நினைவுருவி மத்தன்னை
ஓர்த்துணர லாகா வுபசாந்த—நீர்க்கடல்வாய்
யானுய பேரலி யியலழிய மாய்க்கும்பு
மானே சிறந்தபத்தி மான். ௨

—:o:—

## ௪௮. பத்திவிசாரத்திறன்

499. உயிர்க்குயிரா நிற்குந்தன் னுண்மையா மீசன்
பயக்குந் திருவருளின் பாங்கே—நயக்குமெய்ஞ்
ஞான விசார நடைகடைபோ யுள்ளநிலை
ஞான சமாதி யடைவு. ௧

500. உள்ளே யிருக்குமுடையா னருள்வலத்தால்
உள்ளே யெழுந்தா லொழியுந்தம்—கள்ளமனச்
சேட்டைவலத் தாலுளத்துட் சேர்ந்தமைதிச் சால்பெய்த
மாட்டுநரார் போக்கை மறித்து. ௨

501. குருவருளா லல்லாமற் கூடற் கரிதாம்
இருநா லுருவத் திறைவன்—திருவருடான்
வித்தையினும் வாராது வேறெதினும் வாராது
பத்தியினாற் றானே வரும். ௩

502. களைகணு மீசன் கனவருட்சீர் தன்பால்
விளைவுவிளை யாமையுள்ள வேண்டா—தளையின்
விடுதலைதான் வேண்டி விசாரத்திற் சிந்தை
கடுகியதே சாலுங் கரி. ௪

503. இறைவன் றிருவருளும் யானுரென் றுய்ந்துள்
உறையுங் கருவி யுசாவும்—பறையுங்கால்
ஒன்றுக்கொன் றுற்ற வுதவிகளா யான்மபரத்
தொன்றுநிலை யுய்ப்ப வொருங்கு. ௫

504. மெய்ப்பொருளே யுள்ளத்து விண்டாலல் லாதுலகச்
சொப்பனமா மாயை தொலையாது—சொப்பனநோக்
குள்ளதா னுரென் றுசாவு முபாசனையே
விள்ளுமா றுற்றும் விதம். ௬

505. தனாது சொரூபத்தைத் தானநுசந் தித்தல்
மனாதிகளுக் கெட்டா மகேசன்—றனாது
பராபத்தி யென்ப பகருமிரு வோரும்
சொரூபத்தி லொன்றாத லால். ௭

(குறள் வெண்பா)

(8) ஆன்மாநு சந்தான மஃதுப்ர மீசபத்தி
ஆன்மாவா யீசனுள னால். ௮

—பகவான்

(நேரிசை வெண்பா)

506. தானுவருள் வேட்டடையுந் தானா ரெனக்காணின்
ஆணவம்போ யாண்டா னருள்வெளியாம்—தானுவாம்
அந்த வருள்வெளிக்கே யாணவம்போ யற்றதற்பின்
பெந்த மலத்தொடர்பு மின்று. ௯

507. மற்றை யிரண்டு மலமுமொருங் காணவமாம்
பற்றையே பற்றிப் படர்வனவாம்—பற்றாகும்
அவ்வா ணவந்தா னழிந்ததே லவ்விரண்டும்
எவ்வாறு முய்த லிலை. ௧௦

—:o:—

௪௯. ஏகாக்கிரபத்தித்திறன்

508. ஊசிக்காந் தம்வடக் கொன்றலென வீசன்டி
நேசித் தொழுகுமொரே நெஞ்சத்தார்—பாசக்
கடலா முலகிற் கருத்துத் திகைத்துத்
தடுமாறு வாரலர் தாம். ௧

509. தானுன்வனெஞ் சத்தாற் றழுவியுல கிற்சரிப்போர்
தூணையிறு கப்பற்றிச் சுற்றிவோர்—மாணசல
ஆலம் பனத்தரவீ ராணவரா காமையினால்
மாலம் புவியின் மடார். ௨

510. எவ்விவகா ரங்களினும் யாதொன் றியைந்துளதேச
செவ்வியவிம் மாண்பொருளிற் சிந்தையுறிற்—செய்வனவாம்
அந்தவிவ காரம்பல் லாயிரத்தா லும்மன்னார்
சிந்தா குலமுறார் தேர். ௩

511. துன்று மரிசித் தொகையுள்ளே சுற்றுமுற்றும்
சென்றிழல்வ தாமே திரிகையாற்—பொன்ற
அரைபட் டழிபவலா லச்சடிவிட் டேகா
அரைபடுப வாகா வறி. ௪

—:o:—

## ௫௦. தியானவிசாரத்திறன்

512. மெய்யுணர்வின் பாக விளங்கும் பரம்பொருளாச்
செய்யுமனோ பாவனையே சிந்தனையாம்—பொய்யாம்
மயல்வித்து மாள மனத்தையான் மாவிற்
பயில்வித்த லென்பவுசாப் பண்பு.

—:o:—

## ௫௧. ஆகாயத்தியானத்திறன்

513. எய்த நினைந்த விரும்பெருமை யத்தனையும்
எய்த் நினைந்தாங் கெளிதுறவே—எய்துவிக்கும்
ஆயப் படாத வருமைசா லவ்வகண்டா
காயத் தலத்தின் கருத்து. ௧

514. காயத் தலத்தைக் கருதிப்பின் னவ்வகண்டர்
காயக் கருத்துங் கழன்றோரே—காயம்
பிறவாப் பெருஞ்சிறப்புப் பெற்றாரா மற்றோர்
இறவாப் பிறக்கு மிழிபு. ௨

—:o:—

## ௫௨. காலத்தியானத்திறன்

515. செத்துப் பிறக்குஞ் சிறுமையறச் சாவாத
நித்தப் பெருமை நினைதிரேல்—எத்துணையும்
தோற்ற வொடுக்கத் துளக்கமிலாக் காலமதை
ஆற்ற நினைத லணடவு. ௧

516. காலமே தாமாகக் கண்டந்தக் காட்சியையும்
ஏலவே விட்ட வியல்பினாரே—ஞாலமேற்
சாவாமை பெற்ற சதுரர்மற் றெல்லோரும்
வீவாரவ் வாளின்கண் வீழ்ந்து. ௨

517. ஏலவே தந்நிலையி லெய்தினார் தம்மையலாற்
காலமென வோர்பொருளுங் காண்கிலார்—காலமென
முற்றுமொரு தத்துவத்தை மூன்றாக வோர்ந்திடுதல்
மற்றதனின் மேலு மிலர். ௩

—:o:—

## ௫௩. நிதித்தியாசனத்திறன்

518. ஓரா விடத்துளதா யோர்க்குமிடத் தில்லாத
பாராதி யாய பகிரண்டம்—ஓராதே
ஓர்த்துள்ள முள்ள துணரி னொருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு. ௧

519. யாவ னெதனை யிடைவிடா தெண்ணுவான்
ஆவ னதுவாக வத னாற்றலால்—ஆர்வமொடு
சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய். ௨

520. நிறைந்தவுப சாந்தத்தெண் ணீர்மையே வேதம்
அறைந்தமுடி வாந்தவப்பே றாகும்—செறிந்த
அபரிமித நன்மை யடையினுஞ்சற் றேனும்
சபலமுறு மாயிற் றவிர். ௩

521. இன்றியமை யாதென்னு மெண்ணமுதிக் குங்காறும்
துன்றி யொருவனொன்றைத் துய்த்தலாம்—கன்றி
வரைந்துகொளு மெண்ண மனத்துதித்தா லாங்கே
விரைந்துகை சோர விடல். ௪

522. அறப்பாலாம் பஃறிருப்பேற் றுண்மட்டு மீசன்
சிறப்பார் திருவருளே றுதே—மறப்பால்
அணவு மனக்கவலை யற்றவுப சாந்த
உணர்வின் றெளிவா லொழிந்து. ௫

523. எண்ணியவை யெண்ணியாங் கெய்தப் பெறுவிக்கும்
திண்மைகெழு சங்கற்ப சித்தியினும்—உண்மையுணர்
வூன்றுதலா லோர்நினைவு மூர்தலிலா வுள்ளமைதி
சான்றநிலை தானே தலை. ௬

———:o:———

## ௫௪. சாதனாந்தரத்திறன்

524. மிக்க விசாரணையை விட்டானன் மனமடக்கத்
தக்கபிற சாதனங்கள் சற்றுமிலை—மற்றவற்றால்
ஆளப் படினஃ தடங்கினாற் போன்றிருந்து
மீளக் கிளம்பி விடும். ௧

525. வளியடக்கத் தானு மனமடங்கு மானால்
வளியடங்கி நிற்குமம் மட்டே—வளிதான்
கழல்வாய் மனமுங் கழன்றுபுறஞ் சுற்றும்
பழவா தனைவயப் பட்டு. ௨

—:o:—

## ௫௫. விசாரசகாயத்திறன்

526. காண்பானுங் காணப் படுபொருளுங் காட்சியுமாய்ச்
சேண்பாயுஞ் சிந்தைச் செயலொடுக்க—மாண்பாகும்
மார்க்கமா மந்த மனந்தான் றனைத்தன்னாற்
பார்க்கவே செய்யும் பரிசு. ௧

527. மண்டுசெபத் தோடு மகிழ்ச்சிதரு மூர்த்திநினை
வுண்டிநிய மத்தோ டொழிவறத்தாம்—கொண்டுபுரி
சாதனையாற் சிந்தையொரு தன்மைத்தாய்ப் பண்டையுள
வாதனைபோ யெய்தும் வலி. ௨

528. யானையெளி தேந்து மிருப்புத் தொடரார்க்கைக்
கானசல னம்போகு மாறேபோல்—ஈன
மலினமனத் துக்குருநா மத்தாலே மாயச்
சலனந் தவிர்ந்தொழியுந் தான். ௩

529. இவ்வாறுள் ளேகாக கிரவுநஞ்சேர் சிந்தைக்கே
செவ்வே விசாரந்தான் சித்திக்கும்—ஒவ்வாத
மிச்சைமன ஞான விசாரநெருப் புக்கீந்த
பச்சை விறகின் பரிசு. ௬

——:o:——

## ருகூ. சாதனையெல்லைத்திறன்

530. முப்புடியின் பேத முயங்களவுஞ் சாதனைதான்
எப்படியு மின்றி யமையாது—கற்பனையாம்
மோகவகங் கார முசியாமை முப்புடியால்
ஊகமுற லாகு முணர். க

531. சாதனையா லவ்வகந்தை சாய்ந்தா லதன்பின்னர்
ஏதிலென யர்து பெதிர்வதிலை—சூதுலாம்
அன்னியமா முன்ன மறிந்தவெலா மத்துவிதம்
பன்னியஞா னன்மசொரூ பம். உ

532. உருவெளிய தாவுலகை யோர்வ ரகந்தைக்
கருவிளிய நின்றண்மை கணடோர்—பெருவெளியே
தாமாக நின்றிலகுந் தன்மையாற் றன்மயமே
தீர்மானஞ் சின்மாத் திரம். ௩

——:o:——

## ருஎ. நிட்டைவிவேகத்திறன்

533. அனுபமாத் தானொளிரு மான்மநிட்டை யொன்றே
அனுன்மபந்த மெல்லா மறுக்கும்—தனுதியல்பாம்
மெய்யொடுபொய் வேறு படுக்கும் விவேகமோ
துய்யநிரா சைக்குத் துணை.

——:o:——

## ௫௩. வியட்டியகத்திறன்

534. பழுதறுமெய்ஞ் ஞானப் பரம்பொருடா னேக
முழுமுதலா நிற்கு முறையாற்—றொழுதற்
கினைத்தென்ற லாகா விறையிற்றான் வேறாய்த்
தனித்தன்மை யாகை தவறு. ௧

535. அகண்டமெய்ஞ் ஞானவெளி யாம்பொருளின் வேறாய்
உகண்டுழல்பொய்ந் நானு வுதித்தல்—வகிர்ந்துநல்
லாறுபா ழாக வதனையிரு கூறாகக்
கோறலாம் பாவங் குறி. ௨

536. உணர்வசைவற் றொன்று மொளிர்மெய் யுலகத்
தணவலெவன் வேற்றியற்கை யாட்சி—புணர்வதாம்
வெற்றுநினைப் பாலிறையின் வேறாய் மனவுலகத்
துற்றொருவ னிற்ற லொழிந்து. ௩

537. உண்மையைவிட் டுத்தா னொழிந்துளதாத் தோற்றும்பாழ்
எண்ணமே பந்தத் தியல்பதனாற்—றிண்ணமாய்
உண்மையைவிட் டுத்தா னொழிய வொருமையினவ்
வெண்ணமெழுங் காலதனை யெற்று. ௪

538. தன்னிலைவிட் டெந்நினைவுஞ் சாரற்க சார்வானேற்
பின்னிரங்கி மீட்டேயும் பேதுறற்க—என்னைபின்
எற்றென் றிரங்குவமுன் செய்யற்க செய்வானேல்
மற்றன்ன செய்யாமை நன்று. ௫

539. என்றநா ளான்மநிலை யென்னும்யோ கானந்தம்
ஒன்றுவே னென்ன வுயங்கற்க—என்றுமொன்றும்
உண்ணமைஞா னான்மநிலை யோர்கால முஞ்சேய்மை
அண்மையாந் தேயமுமின் றங்கு. ௬

——:o:——

## ருசு. மூலமுனைவுத்திறன்

540. யாங்கள் பிறந்த விடமே தெனவறிந்து
தாங்கள் பிறந்தவிடஞ் சார்வதே—தாங்கள்
புகுந்தவிடத் தன்றியிலாப் புன்கண் களையத்
தகுந்தநெறி தம்மிற் றலை. க

541. வந்த வழியே மறிந்தாயே லவ்வழியால்
அந்தமிலாப் பேரின்ப வீட்டைவாய்—சொந்த
உரிமையுள வீட்டுநிலை யோராது தேடித்
திரிந்துழலும் புந்தியே தேர். உ

542. மையல் வுளத்து மடக்கு முணர்வுறுங்கா
றையுணர்வு சற்று மடங்காது—மையலாம்
ஐயுணர்வு முற்று மவியுங்கா றெய்தாது
மெய்யுணர்வா மின்ப விளைவு. ௩

——:o:——

## சுய. சாதகர்நடைத்திறன்

543. தங்கருமஞ் செய்யத் தலைப்பட்டார்க் கத்துவிதத்
துங்கமுற்று மான்மநிலை சோர்தலே—பங்கமாம்
என்றூற் பிறர்கா ரியத்துத் தலையிடுதல்
ஒன்றுமோ வுள்ளப் பெறின். க

544. செயிராந் திறமொன்றுந் நேருறு நாளும்
அயலா ரிடங்குணமே யாயின்—உயிர்வாழ்
வனுதரமே செய்தற் கவகாச மின்றி
மனோகரமா மென்றே மதி. உ

545. அக்காரம் போலகந்தீ ரக்குணத்தா லின்றநெஞ்சே
மிக்காருன் மேலன்பு மேவியது—நோக்கவாம்
உன்குற்ற மெல்லாமவ் வுத்தமருட் கொள்ளாது
மன்னித்த மாண்பா மதி. ௩

546. இழுக்கன் மனித்த வியல்பே யெனினும்
ஒழுக்கமுளங் கொண்டவர வோரவ்—விழுக்கை
மதமானத் தாலே மறையா துடன்பட்
டிதமாய்த் திருந்த வியைபு. ௪

547. தொக்க நியமநெடுந் தூரந் துணைசெயலால்
ஒக்கவருட் டித்தற் குரியனவே—மிக்கமெய்ஞ்
ஞான விசாரணையைத் தடுப்பினவை
ஊனமென் றப்போ தொழி. ரு

548. வேண்டியதான் வேண்டியவா றெய்தினது செய்தவத்தால்
ஈண்டியதன் சத்தியினென் றெண்ணுதே—மூண்ட
இறைவன் றிருவருளா லென்றுணர்ந்து மேன்மேல்
இறைவன்றாள் காமுறுக வேற்று. சு

549. ஆண்டான் றிருவருளா லன்றித்தன் றன்வினையால்
ஈண்டாது சித்தி யெனவறிவித்—தாண்டான்செய்
தண்ணருளை நாடத் தயாரிப்பே தோல்வியுண்டு
பண்ணு முயற்சிப் பயன். எ

——:o:——

## ருக. சீடாசாரத்திறன்

550. என்றாஞ் சீடர்க்கே யேற்ற குணமென்னும்
குன்றேறி நின்ற குரவோர்தம்—பொன்றா
அனுபூதி யாற்சொனநல் லாற்றின்க ணூன்றிக்
கனவேயு நிற்றல் கடன். க

551. மறதியா லோமற் றெதனாலோ வேத
நெறிதவறிச் செல்லநேர்ந் தாலும்—உறுதிபட
உய்யுநெறி மேற்கொண் டொழுகுவோ ராசான்சொல்
கைகடக்க லாகாது காண். உ

552. செய்தொழுக வென்றுந்தன் சிந்தனையி லத்துவிதம்
செய்கையிலோர் காலுமது செய்யற்க—உய்தலுற
மூன்றுலகி னோடும் முயங்கலா மத்துவிதம்
ஆன்றகுரு வோடே யடாது. ௩

(9) அத்துவித மென்று மகத்துறுக வோர்போதும்
அத்துவிதஞ் செய்கையி லாற்றற்க—புத்திரனே
அத்துவித மூவுலகோ டாகுங் குருவினோ
டத்துவித மாகா தறி. ச

—பகவான்

——:o:——

## ருஉ. ஜீவகாருண்யத்திறன்

553. தன்னையே தானுய்யக் கொண்ட தபோதனனே
மன்னுயிர்க்கு நன்மைசெய மாட்டுவான்—துன்னும்
குருடர்க் குதவுங் குருடனே யார்தன்
இருடீர் கலாவன் னியன். க

(குறள் வெண்பா)

(10) உய்ந்தானன்றன் மன்னுயிர்க ளுய்விப்பா னன்னியனே
அந்தனுக்கந் தீன்றுணையா மாறு. உ
—பகவான்

(நேரிசை வெண்பா)

554. ஞானமாந் தன்னிலைக்கே நானழிந்து நிற்குறுமெய்ஞ்
ஞானி நலிந்தடைக்து நம்பினோர்க்—கூன
மய்க்கொழியு மாற்றுலான் மாறுபவங் கூட்டல்
உயிர்க்கருணை யூனம் பிற. ந

—:o:—

சுரு. பரோபகாரத்திறன்

555. அயலார்க் கொருவ னளிக்கின்ற வெல்லாம்
நயமாத் தனக்கேதா னல்கும்—இயல்புணரின்
ஊராண்மை யென்னு முபகாரம் யாவரே
சீராள ராகச் செயார். க

556. பாதலத்தே புக்குப் படிந்தாலு மாவலிதான்
சீதரனுக் கீந்து சிறப்புற்றான்—ஆதலால்
ஒப்புரவி னல்வருங் கேடெனி னஃதொருவன்
விற்றுக்கோட் டக்க துடைத்து. உ

—:o:—

சுச. பூததயைத்திறன்

557. வலியா ரெளியரைத்தம் வல்லாண்மை யாலே
நலியாநின் றலதனை நாடிச்—சலியா
தெளியார்க் கிரங்குமிறை யேற்பவொ றுப் பானென்
றளியார்ந் தொழுக லறன். க

558. ஆசுத்தி னின்றகன்ற வா்ருயிரை மீட்டுமெவ்
வாகத் தினிற்சேர்க்கு மாற்றலிலார்—சாகத்தான்
எந்தவுயிர் தன்னையுமெவ் வேதுகொண்டு மாகத்தின்
உந்துமதி கார ருறார். உ

559. மருவுந் தமர்பிறர்கள் வன்கணுழக் கும்போ
துருகி யுருகி யுருகுமே—மருவும்
தொடையாகத் தன்மேற்சேர் துன்பங்கட் கெல்லாம்
உடையாத சிந்தை யுரன். ௩

—வினா—

(கொச்சகக் கலிப்பா)

560. *பச்சையிலைத் தூறு படர்ந்தபுத ரென்றெண்ணி
வைச்சிடுகால் வீங்க வரிக்கதண்டு கொட்டவுமே
நிச்சயமாய் வெங்கடநின் னெஞ்சொப்பிச் செய்தாற்போற்
றற்செயலாய் நேர்ந்த தவற்றுக் கிரங்கலென்னே. ச

---

*ஒருநாள் பகவான் அருணைசலத்தின்மேல் எழுந்தருள்கையில், புதரால் மறைக்கப்பட்ட ஒரு குளவிக்கூட்டின்மேல் தற்செயலாய்த் திருவடி வைக்கவே, திரளான குளவிகள் அத்திருவடி முழுவதும் மொய்த்துக்கொண்டு ஊசிகுத்தினாற் போலக் கொட்ட ஆரம்பித்தன. பகவான் உடனே அத்திருவடியை எடாது, "ஹிம்சை பண்ணியதற்கு இது வேண்டும்; படு" என்று கூறிக்கொண்டே சிறிது நேரம் நின்றருளத் திருவடியில் வீக்கம் கண்டது. அதுபற்றிய வினாவும் விடையுமே இச் செய்யுளும் அடுத்து வருவது மாகும்.

—விடை—

(11) பச்சிலைக்கட் கூடேட் படர்க்கதங் கூடிலைய
வைச்சிடுகால் வீங்க வரிக்கீண்டு
கொட்டிடினும்
தற்செயலாய் நேர்ந்த தவறேனுந்
தானிரங்கும்
அச்செயலு மின்றே லவன்மனதின்
றன்மையென்னே. ரு

—பகவான்

—:o:—

## சாரு. நடுவுநிலைத்திறன்

(நேரிசை வெண்பா)

561. நல்லா ரெனத்தா நடப்பார் நடுநிலைவிட்
டெல்லார் தமக்கு மியன்றபொது—அல்லாத
சிற்சில் லுரிமை சிறப்பாகத் தங்கட்கே
பற்றிக் கொளுதல் பழுது. க

562. உரிமைசில மற்றார்க் குளவென்னி னந்த
உரிமையெலாந் தங்கட்கு முண்டாம்—உரிமைசில
மற்றா ரிடத்து மறப்பா ரவற்றைத்தாம்
உற்றாற் பழுதே யுறும். உ

—:o:—

## ௬௬. மனச்சான்றுத்திறன்

563. ஏயமனச் சான்றாக் கிசையொழுக்கே நல்வினைதான்
மேயதனை யோர்கால் விலக்குமேற் — றூய
மனச்சான் றதனை மறுத்தங்கு வாழ்விற்
றனிச்சார்ந்து வாழ்வே தலை.

———:o:———

## ௬௭. பொய்யாமைத்திறன்

564. ஆன்மபர வுண்மை யநதிகா ரிக்குவந்து
தானுரைத்த றன்னிற் றவறுறும் — தான்முன்
மொழிந்தவத னோடு முரண்பட்டு வாய்மை
அழிந்து மறுக்கு மது. க

565. நாயகமா யார்க்கு நடுநின்ற செம்பொருளே
தாயகமா மெய்யுருவாச் சார்தலால் — வீயும்
தலைபோகத் தக்க சமயத்துஞ் சொன்ன
சொலைமீற லுய்யாத் துயர். உ

———:o:———

## ௬௮. அநாசத்தித்திறன்

566. நீரிற் படகு நிகழ்வதலா னீர்படகில்
ஊரிற் பெருத்தவிடை யூறேயாம் — வாரிதிசூழ்
பாரில் வதிவதலாற் பார்மனித னுள்ளத்துட்
சேரி லுயிர் வாழ்வுமுற்றுந் தீங்கு. க

567. கொள்ளுங் குடமன்றிக் கொள்ளா மரக்கட்டை
வெள்ளத் தமிழ்தல் விதியின்றே—உள்ளத்திற்
பற்றுநின் றூரன்றிப் பற்றற் றூல்கியல்வாய்
ஊற்றிலு மாழ்க திறன். ௨

568. யாவற்றி னோடு மியல்வா னெனினுமுளத்
தோர்பற்று மில்லா தொழுகுவோன்—ஆபத்துச்
சேரா னொருகாலுஞ் சிந்தை சிவமயமாய்
ஊராநிற் குந்தெளிவா லோர். ௩

569. விஞ்சையாத் தோன்றும் வெறும்பொய் யுலகித்தைத்
தஞ்சமாத் தான்பற்றித் தாழாது—நெஞ்சாற்
றுறந்து புளிம்பழத் தோடுபோற் றோய்ந்து
மறந்து கிடப்பே மதி. ௪

——:o:——

௬௬. துறவுமாட்சித்திறன்

570. உடலி னுலகி னுவர்ப்பெப்போழ் துண்டாம்
உடனே துறத்த லுறுதி—அடல்சேர்
உறுதிமேற் கொண்ட வுயிர்க்குத்தம் வாணாள்
அறுதி யிடலருமை யால். ௧

571. சொப்பனமாத் தம்மிடத்துத் தோற்றும் பலபலவும்
கற்பனையா வெண்ணிக் கழன்றோரே—சற்பனையாம்
மாயச் சழக்கறுப்பார் மற்றையார் தாமறியார்
ஆய சழக்கொழிக்கு மாறு. ௨

572. அச்சமோ காணாப்பே ராண்மையா லிவ்வுலகைத்
துச்சமா வெண்ணித் துறந்தோரே—நிச்சயமாய்
மெய்ப்பொருள் காண்கிற்கும் வித்தகர்மற் றேனையரோ
பொய்ப்பொருள்காண் புல்லறிவி னார். ௩

573. இல்லாம லுள்ள வுலகை யிருந்துமே
இல்லாத தாக்கை யிகத்தலே—இல்லாது
போன்றொளிரும் போதப் பொருளாய தன்னிலையை
ஆன்றோ ரடைதலென் பார். ௪

——:o:——

## எ௦. சமட்டிமனத்திறன்

574. ஓதலிரண் டாமனத்தை யூர்ந்த சுபாசுபமாம்
வாதனையைக் கொண்டே வழங்கலாற்—பேதமுறு
நன்றொடுதீ தாக நடக்குமன முள்ளபடி
ஒன்றே யுணர்வார்க் குணர். ௧

575. என்றன் மனமென்று முன்றன் மனமென்றும்
துன்றகமே பாசத் தொடக்காகும்—மன்றவே
தெள்ளும் பரமான்ம சிற்சத்தி யாயுளவா
றுள்ளமன மொன்றே யுணர். ௨

——:o:——

## எக. அகந்தையொழிவுத்திறன்

576. மேவலரும் பேரின்ப வீடு விழுத்துறவு
சாவகலுஞ் சாவு சதுரப்பா—டியாவும்
மருளுடனா னென்ற மயக்கமற லென்னும்
ஒருபொருள வேயென் றுணர். ௧

577. கற்றலொடு கேட்டல்கருதலொடு நிற்றலருள்
பற்றலொடு மோனம் பரார்த்தமம்—மற்றும்ப
சாந்த மகம்பத்தி தானந் தவந்தன்மம்
ஆர்ந்தயோ கெல்லா மவை. உ

(12) தானந் தவம்வேள்வி தன்மம்யோ கம்பத்தி
வானம் பொருள்சாந்தி வாய்மையருள்
—மோனநிலை
சாகாமற் சாவறிவு சார்துறவு வீடின்பம்
தேகான்ம பாவமறல் தேர். ௩
—பகவான்

578. செப்பமுடைத் தன்மத் திறங்கடாம் பற்பலவாப்
பொற்பணிகள் போலப் புலப்படினும்—அப்பணிகட்
குண்மையாம் பொன்னேபோ லொன்றுந் தியாகமே
உண்மையா மவ்வறங்கட் கோர். ௪

579. வியாவடிவாந் துன்ப வழியா மமதைத்
தியாகமொருங் குற்றவதி தீரன்—உசாவால்
அசேட வகந்தைத் தியாக வடைவே
விசேடமாந் தன்ம விளைவு. ரு

580. யானென் றிறமாந் தெழுந்திறைமெய்ப் பூரணத்தை
ஊனஞ் செயாதுள் ளொடுங்கலே—ஞான
சிவசந் நிதியாந் திருமூலட் டானத்
தவநன் னியமந் தரி. சா

581. பரந்சூரிய தாமெய்ப் பரிபூரணத்தைச்
சுருக்குமகங் காரந் தூரப்பே—பரற்கும்
பிழைப்பா டிலாத் பிறங்கலுறு முண்மை
வழிபா டறிஞர் மதிக்கு. எ

582. செத்தாலே வீட்டுலகஞ் சேரலா மன்றிமற்
றெத்தாலுஞ் சேர லியையாதே—செத்தொழிகை
எவ்வதெனின் யானெனதை மாய்த்தலே யன்றிமற்
றிவ்வுடம்பை மாய்த்த லிழுக்கு. அ

583. இறப்போ டியைந்த விரும்பிறவி மாய்க்கும்
பிறப்போ டியையாப் பெரும்பே—றிறப்பே
தெனநீர் வினவி னிருளியைந்த யானே
டெனது மிறந்து விடல். கூ

———:o:———

## எஉ. தத்துவஞானத்திறன்

584. அதிகார மாகவல் லாண்மைபல வாற்றும்
சதிகார மாயை தனிலே—உதிசீவ
போதாகங் காரமயல் போயே பரமான்ம
போதாறு பூதியுண் டாம். க

585. இல்லதுபோல் கின்ற விறையே யுளனன்றி
உள்ளதுபோ லுந்தா னொருவனென்றும்—இல்லையெனத்
தன்னுடைய சூனியத்தைத் தானுணருந் தன்மையையே
பன்னுபர ஞானமென் பார். உ

———:o:———

## எரு. காட்சிமாட்சித்திறன்

586. மாணுஞ் சிதாகாய மார்த்திரண்டான் மேலுக்குக்
காணுந்தன் மங்கலில்லார் கற்பனையே—தானுவாம்
ஆன்மா விடத்துப்பா ழாயவிருண் மாயையிலே
ஆன்மா விரண்டற் றது. க

587. யானுலகைக் காண்கின்றே னென்னி னதன்மன்மம்
ஊனமறு முண்மை யொளியாய—ஞானபரி
பூன்றவா னென்னுட் புலவுலகுங் காண்பானும்
தோன்றலா மென்றே துணி. உ

588. அற்பவக மல்லா வகண்டத்தால் யாவையுமம்
மெய்ப்பரமாந் தன்னுள்ளே மேவுவன—சொப்பனத்தே
துன்னியபல் வேறுவகைத் தோற்றம்போ லான்மாவே
அன்னியம்போற் காண்ப தறி. ௩

589. பொய்யா மிராத்தோற்றம் போங்கா றுமாதார
மெய்யாம் பழுதை விளங்காது—பொய்யா
மருவுமுல கத்தோற்ற மாறளவு முண்மைச்
சொருபவதிட் டானமுந்தோற் றாது. ச

590. உலக வுணர்ச்சி யொழிந்த பொழுதே
குலவுபர மான்மவொளி கூடும்—குலவான்ம
சோதிசேர் வாழ்வே சுபாவவாழ் வாருயிர்க்கு
மீதியுள வெல்லா மிறை. ரு



# மூன்றாவது

# தத்துவ அநுபவவியல்

## க.—அபரோக்கஞானத்திறன்

591. ஆன்மாவே யுண்மைவிழி யாதலா லஃதறியும்
ஆன்மாவே யுண்மை யபரோக்கம்—ஆன்மநோக்
கற்றசடர் தாமே யபரோக்க மென்பரயல்
உற்றவிட யம்புலனு வோர்ந்து. க

592. எல்லையிலாக் கண்ணு யிருந்தொளிரான் மாவுக்குப்
புல்லுவதா மோமுப் புடித்தோற்றம்—வல்லமைசேர்
ஞானத் தழல்விழிசெய் நாட்டத்தாற் றன்மயமாம்
ஏனையெதிர் யாவு மெரிந்து. உ

593. தீதுநல மாந்தொந்த திட்டியொடு காலமிடம்
ஏதுபலங் கன்மமிவை யின்றியே—யாதும்
பிறிதா வறியவொரு பின்னமிலா வுண்மை
அறிவே யனந்தவிழி யாம். ங

——:o:——

## உ.—நித்தாபரோக்கத்திறன்

594. உள்ளுசா வாலே யுளதாம் பயன்முழுதும்
கள்ளாநா னென்னுங் கருத்தழிவே—தெள்ளிதாய்
நித்தசித்த மாக நிகழான்ம தத்துவத்தை
மெத்தலெனக் கூறன் மிகை. க

595. சுத்தாப ரோக்கத் துலக்கமாந் தன்சொரூபம்
பத்தா மவன்றன் பரிசுபேற்—பொய்த்த
மறதிநீக் கத்தான் மடுப்பதலாற் கண்ட
உறுதி புதிதன் றுணர். உ

596. கழுத்தணிதா னந்தக் கழுத்திலுறச் செய்தே
வழுக்கினுள் போலே மயங்கிக்—கழுத்திற்
றடவிப்பார்த் தத்தைத் தலைப்படலே தன்னைத்
தடவியுளத் தெய்துந் தரம். ரு

597. மன்மப் புலந்தருவு மார்க்கமொழிந் தெஞ்சியவாம்
கன்மமுத லாய கடப்பாட்டால்—என்முயற்சி
செய்துமித யத்துத் திகழான்ம வைப்பைத்தாழ்
எய்துவித் தின்புறுத்த லின்று. சு

598. ஒன்றே பலவாக வுற்பவித்து முற்பவியா
தென்றியம்ப வேண்டி யிருத்தலாற்—றொன்றேயவ்
வேகமா யாரு மியைதலான் மெய்ஞ்ஞான
யோகமே முத்தி யுணர். ரு

599. ஆன்ம சொரூபமிரண் டற்றமையாய்த் தம்மெய்யைத்
தான்மருவ லுற்றுத் தடுமாறி—மேன்மேல்
அலங்குமுயிர்ச் சேட்டை யடங்குழியவ் வுள்ளத்
திலங்குமுணர் வம்மெய் யியல்பு. சு

—:o:—

## ௩. நிருவிகற்பசமாதித்திறன்

600. புறத்தில் விகற்பம் புலப்படா மையே
திறத்த நிருவிகற்பச் சீரன் — றிருக்கும்
மனத்தில் விகற்ப மருவாமை தானே
கனத்த நிருவிகற்பங் காண். ௧

601. இருக்கின்றே னென்னு மியற்கை யுணர்வாய்த்
தரிக்கின் றதுவே சமாதி — செருக்கொன்
றுபாதியோ டேய்ந்த வுணர்வி னொழிந்தவ்
வபார நிலைக்கே யமர். ௨

602. நானென்ப தற்ற நடுநிலையே ஞானந்த
மோன சமாதியென்பர் மூதறிஞர் — தானதுவாம்
மோன சமாதி முயங்கும் பரியங்கம்
நானறலே நாட்டமா நாடு. ௩

603. யானென்ற தன்மை யெழுந்தழிதல் போலன்றித்
தானென்று நின்று தரித்தலால் — யானென்ற
பொய்த்தன்மை பொன்றப் புறக்கணித்துத் தானென்ற
மெய்த்தன்மை நீயா விளங்கு. ௪

604. யானுயிரென் றெண்ணி யியலழிந்த வென்னெஞ்சே
யானிறையென் றேமாந்து போதியால் — மேனிலையில்
யானென்ப தேதுமே யில்லை யிதயமாம்
தானென்ப தொன்றைத் தவிர்த்து. ௫

605. அமைந்தமனத் தாலே யகண்டாறு பூதி
சமைந்தநிலை தானே சமாதி — அமர்ந்த
பரிச்சின்ன மற்ற பரமான்ம சித்தி
திரிச்சமனந் தான்கடவுட் சத்து. ௬

606. உள்ளும் புறமு மொருமித் துணர்வுருவாய்
விள்ளுசிதா னந்த விளக்கமே — தள்ளருமெய்ஞ்
ஞானமுடி வாவறிஞர் நாட்டுபரா னந்தமய
மோனவடி வான முதல். எ

607. மோனமய மாக முடிந்த முழுமுதலை
நானதுவென் றெண்ணி நலிதலெவன் — மோனமயம்
நண்ணுவதே நிட்டையது நானறலே நானறவே
எண்ணுவதற் கெங்கே யிடம். அ

—:o:—

## ௪. நிருவிகாரத்திறன்

608. ஆற்றப் பெரிய வரும்புலவீர் யாவற்றுத்
தோற்ற மறைவுந் தொடர்ச்சியாத் — தேற்றியே
போதுகின்ற தாமோ புலப்பட் டழிவனவோ
யாதோ விகாரத் திடம். க

609. ஊனமா மூத்தை யுடலின் பிறப்பிறப்பால்
ஊனமாந் தோற்ற வொடுக்கங்கள் — ஞானவிரான்
ஆன்மாவுக் காமென்ன லம்புதோற் பத்திலயம்
வான்மேவு மென்னு மயக்கு. உ

610. பட்டா முல்லைப் பட்டாதரிட் முழுதும்
விட்டாய தன்னை விராரப்—பட்டாய்
மயங்கி யுழலு மயக்கத்தின் மேலும்
மயக்கு முளவோ பிற. ௩

611. விவகாரத் தால்விளையும் வில்லங்கஞ் சற்றும்
அவ்விகாரான் மாவை யடையா—தவகாச
வானங் கதுவாதா மண்ணீர்தீக் காலவற்றின்
ஊனந் தினைத்துணையு மோர். ௪

612. மனைவியொடு நாத்தூண் மருகியொடு மச்சான்
மனையோ டனையாயு மற்றோர்—நினைவால்
ஒருத்தியே தோன்றுவா ளுண்மையிலே யன்னாள்
உருத்திரிதல் சற்று முறாள். ௫

—:o:—

## ௫. ஏகாந்தத்திறன்

613. உலையாத முத்தி யுறுவோர்க்கு வேண்டும்
பலவாங் குணத்துள்ளும் பார்க்கின்—நிலையாம்
தனிமை தனையுக்குஞ் சால்பே மனத்தில்
இனிதமைய வேண்டு மியல்பு.

—:o:—

## ௬. அசங்கத்திறன்

614. எவ்வெவையெவ் வெத்தினைவந் தெய்திடினும் போயிடினும்
அவ்வவற்றைக் காணுந்தா னன்னியனாய்—அவ்வவற்றாற்
காற்றிற் றுரும்பிற் கலங்காமே யவ்வவற்றை
ஆற்றி யிருப்ப தறிவு. ௧

615. உள்ளும் புறம்புமனந் தூமௌனந் தம்மைவற்றோ
டெள்ளளவும் பற்றா திபலிசம்பை—தள்ளும்
அசங்கனுத் தன்னையறிந் தாலன்றி மோக
வசங்கதனு காமை யரிது. ௨

616. உள்ளத்து வாதனைதா முள்ளபடிச் சங்கமென்
றெள்ளத் தருவனவா வேய்தலாற்—கள்ள
மனமடங்கப் பெற்றாலம் மாண்புடையோ ரெத்த
இனமுறைந்தா லும்மின் றிழுக்கு. ௩

—:o:—

## எ. மனோநிக்கிரகத்திறன்

617. எங்குமே போக வியலா திருக்குமுழுப்
பங்குபோ லாகப் பவனனுட்க—எங்குமே
மேவா தலைமனத்தை வீட்டலே மெய்ம்மையாச்
சாவாமை யெய்துஞ் சதுர். ௧

618. களைக்கு நிகர்த்தெழூஉங் காமாதி மூன்றும்
முளைக்கு முன்தாகக் கீண்டு—வளிக்கு
நடுங்கி யெழாத நளிகடல்போற் சிந்தை
ஒடுங்கி யிருப்ப துணர்வு. ௨

619. எற்றுந் துயருக் கிடமாக வெப்புலத்தும்
சற்றுங் கருத்துச் சலியாமை—முற்றும்
மடங்கி யவிந்த மறிகடல்போற் சிந்தை
அடங்கி யிருப்ப தறிவு. ௩

620. ஆன்மாவ் மேலாகனத்தா லல்லா தகங்காரம்
தான்மாய்த லில்லாத் தலைகைமைபோல்—ஆன்ற
மனவிரிவா லல்லாது மாயாதே துன்பக்
கனவுலகச் சாட்சியுங் காண். ௪

621. மனத்தைச் செயலறவே மாய்க்கு முபாயம்
எனைத்தானுந் தாந்தெரியா தேங்கி—இனைவீர்காள்
கரணப் படுபொருளுங் காண்பானுந் தானேயா
மாணவே காண்டல் வழி. ரு

622. பொன்னிற் றொடிபோற் புனல்போன் மசரதத்திற்
றன்னுங்களுப் பட்டினத்தைச் சூழரண்போற்—நன்மயமே
காணப் படுபவெலாங் காண்பானி லன்னியமாப்
பேணப் படுதல் பிழை. சா

—:o:—

௩. மிருதமனத்திறன்

623. எண்ணமாச் சிந்தை யியங்கா தொழிந்தாலும்
திண்ணமா வுண்டென்று செப்புவேன்—உண்மையாம்
காலமே யாகக் கரந்தொழுகி ஞானனந்
தாலயமாய் நிற்கு மது. க

624. இன்றன் றில்துள திங்கங் கெனுநினை
வொன்றுஞ் சிறிது முளதாகா—தொன்றுன
நித்தமா யெங்கு நிறைந்ததாய்த் தான்விளங்கும்
சித்தமே சுத்த சிவம். உ

—:o:—

## சூ. முற்றுணர்வுத்திறன்

625. தன்னைத் தவிரமற்றோர் சத்ததையைக்கா ணாமையினாற்
பின்ன மறப்பிறங்கும் பேரறிவே—உன்னதமாம்
முற்றுணர்வா மல்லாது முக்கா லமுமுணரும்
மற்றுணர்வோ வல்ல மதி. ௧

626. உற்றமயற் பீழையொருங் குள்ளமொடிங் கோர்தார்க்குச்
சிற்றுணர்வு தன்னோடே சேர்ந்திருக்க—முற்றுணர்வான்
முன்புள்ள மோகவிருண் முற்றப் பெறுவதலால்
என்பயனு மில்லை யுயிர்க்கு. ௨

627. உள்ளோனுந் தன்னை யுணர்வோனும் பேதுற்றுக்
கள்ளமாங் காட்சிசில காண்பாற்கே—வெள்ளமாம்
முற்றுணர்வு மெய்யாமம் மோகமிலா ஞானிக்கோ
பித்துணர்வா மல்ல பிற. ௩

628. அறிவோனைத் தன்னை யலமந்த போதே
அறிவுசிறி யேனென் றழுங்கல்—அறிவளவிற்
சிற்றுணர்வு போலே சிதைவுண்டு போகும்
முற்றுணர்வு மொக்க முடிந்து. ௪

629. முற்றுணர்வோ னாக முழங்குமறை யீசனைத்தாம்
சிற்றுணர்வோ ராகத் தியங்குநர்க்கே—உற்றுணரின்
என்று மிறைதன் னியல்பாமெய்ப் பூரணத்தால்
ஒன்று முணர்த லிலை. ௫

630. காட்சி யநுபவங்கள் காணுங்கா லொன்றாய
மாட்சியா லம்முத்த மாந்தர்க்குக்—காட்சியசற்
றோற்றம் பலபேதந் துய்க்கு மநுபவத்தாற்
போற்று மபேதமெனல் பொய். ௬

631. பிரமித்து நோக்காற்பில் பேதங்காண் குற்ற
பரர்திட்டி யாலே பலவாம்—உருவத்தைக்
காண்பான்போன் முத்தனுங் காணப் படுவதலாற்
காண்பா னவனலன் காண். ௭

632. சிற்றுணர்வோ ரத்தான் றெருமரன் முன்னிலையிற்
பற்றுணர்வாற் போந்த பழுதேயாம்—மற்றுணர்வு
விட்டுவிசா ரத்தாற்றன் மெய்யுணரச் சிற்றுணர்வு
கெட்டுமுழு தாகுங் கிளர்ந்து. ௮

633. குற்றநோக் காலேது கோலம் பலகோலும்
முற்றுமாந் தோற்ற முயங்குமோ—அற்றுய
அத்துவிதான் மாவை யபரோக்க மாவுணர்தல்
முற்றுணர்வா மல்லை பிற. ௮

634. கனவி லனைத்துந்தன் கற்பனையாத் தன்னுட்
டுனவிட்டுத் தோன்றுந் துணிவால்—நனவில்
அனைத்துமா வொன்றுமான் மாநுபவ மெய்தல்
அனைத்தே யனைத்து மறிவு. ௧௦

635. நவநா கரிகமய னண்ணுது ஞால
அவஞான வார்வ மகற்றிச்—சிவனன்ம
பேதமதி பேர்க்கிற் பிறங்குஞ் சிவஞான
பேர்தமதி னுண்மைப் பொருள். ௧௧

:o:

## க௦. துரியாதீதத்திறன்

636. ஆணவத்தைக் கொன்றொழிந்தார் பானொன்றாகக்
காணவத்தை யாவுங் கழலவே—மாணவத்தைத்
ஆய துரீய மதீதமா யன்னார்பால்
மேயது வாகு மிருந்து. க

637. ஏனையமூன் றுண்மையா வேய்ந்தாலன் றோசுத்த
ஞான நனைத்துயிலன் காவதாம்—ஏனையவை
துன்றலாற் பொய்யாத் துரீயத்தின் முன்னேயஃ
தொன்றா மதீத முணர். உ

(13) நனவு கனவுதுயி லுடுவார்க் கப்பால்
நனவு துயிற்றுரிய நாமத்—தெனுமத்
துரிய மதேயுளதாற் றோன்றுமூன் றின்றாற்
றுரிய வதீதந் துணி. ௩
—பகவான்

638. விழித்தலேயில்லா விழுத்துயிலென் றாலும்
தொழத்தகுமெய்ஞ் ஞானத் துரீயம்—வழுக்கும்
உறக்கத்தோ டொட்டா வொரேவிழிப்பென் றாலும்
சிறக்கப் பொருந்துந் தெரி. ௪

—:o:—

## கக. அகண்டவிருத்தித்திறன்

639. விருத்தியெலாங் கண்டமெனின் வீறு மகண்டம்
நிருவிருத்தி யான நிலையாம்—பரந்து
விரவும்கண் டாகார மேவும் விருத்தி
பரவையுறு மேவுநதிப் பண்பு.

—:o:—

## ௬௨. கிரந்திபேதத்திறன்

640. உற்றநோய்க் குள்ளுறுமிளையாமே யின்பத்தும்
சித்தமொன்று சுற்றுங் கிளையாமே—ஒத்தாங்
குலவுமுதா சீன வுபசாந்த நீர்மை
குலவுகந்தி பேதக் குறி. ௧

641. கடந்ததையுஞ் சிந்திக் கலாதேமே லெய்தக்
கிடந்ததையுஞ் சிந்திக் கிலாதே—படர்ந்து
நிகழ்வதற்குஞ் சான்றேயா நின்றுபசாந் தத்தால்
மகிழ்வதுபே திதகந்தி மாண்பு. ௨

642. என்னென்ன சிந்தை யியைந்திடினு மின்றமையாத்
தன்னெழிந்து சாரவொணாத் தன்மையால்—அன்னோ
இடைநழுவிற் றுன்மநிலை யென்றபிர மாதம்
அடையாமை தானு மது. ௩

——:o:——

## ௬௩. கிருதகிருத்தியத்திறன்

643. எவ்வெப் பொருள்களா லெவ்வெவர்க ளெங்கெங்கே
எவ்வெவ் வநுபவங்க ளெய்திடினும்— அவ்வவ்
வநுபவங்க ளெல்லா மறியுங்கா லான்ம
அநுபவத்தின் கூறுகளே யாம். ௧

644. துய்த்தலுள வுஞ்சென்னி தூக்கவிடா தம்முதலை
உய்த்துக்கொண் டுள்ளமீ தூர்தலாற்—சுத்த
சுகாதீத மான்ம சொரூபமலா லான்மா
சுகசொருப மென்றுரைத்தல் சூது. ௨

645. அன்னதே தானென் றவ் வான்மாவை யாய்ந் துணர்ந்தாற்
பின்னுமே யந்தமெய்ப் பேற்றினன்—பின்னுமாம்
எந்த நுகர்ச்சியை யாருக்கா விச்சித்துச்
சிந்தைப் பரிவெய்து வான். ௩

646. பெற்றவப் பேற்றின்மேற் பேறின்மை யின்மையால்
அற்றவகங் காரசுகா தீதர்க்கு— மற்றும்
செயக்கடவ தில்லாத் திறத்தாலின் னேரே
இயற்றிமுடித் தீடேறி யார். ௪

647. பூன்றபடா மான்மாறு பூதி புணர்ந்தவவ்
வான்றோ ரயலொன் றறிவரோ—தோன்றும்
இரண்டற்ற வன்னார்பே ரின்பமெண லாமோ
மருண்டபரிச் சின்ன மதிக்கு. ௫

—:o:—

கச. துக்காபாவத்திறன்

648. உள்ளமென யாவர்க் குளுமொளிர்தம் முண்மையே
கள்ளமறு மின்பக் கடலதனாற்—கள்ளமுறு
விண்மையே போல வெறுங்கற் பித்தன்றி
உண்மையிலே துன்ப முறுது. க

649. மைம்மயல்சே ராஞான் மார்த்தாண்ட னந்தமது
மெய்ம்மையே யின்பா விளங்கலாற்—பொய்ம்மையாம்
சீவபோ தத்தாற் றெருமரலாந் துன்பலதொன்
றியாவருமே யெய்திற் றிலர். உ

—:o:—

### ௧௫. சுழுத்திவியாபகத்திறன்

650. கனவிற் சுழுத்தி கலந்திலதென் றெண்ணி
மனவுரங் கெட்டுந் திமார்ழ்கேல்—அணவும்
நனவிற் சுழுத்திவலி நண்ணுமே னண்ணும்
கனவிற் சுழுத்திக் கலப்பு. ௫

651. நனவிற் சுழுத்தி நடைகாறந் தன்னை
வினவு முசாக்கை விடாமை—எனவே
கனவிற் சுழுத்தி கலந்தொளிருங் காறவ்
வினவுசா வாற்றல் விதி. ௬

(14) நனவிற் சுழுத்தி நடையென்றுந் தன்னை
வினவு முசாவால் விளையும்—நனவிற்
கனவிற் சுழுத்தி கலந்தொளிருங் காறும்
அனவரத மவ்வுசா வாற்று. (௫)

—பகவான்

—:o:—

### ௧௬. அறிதுயிற்றிறன்

652. பாரின் படுவலையிற் பட்டுக் கொடுந்துயரக்
கூரம்பு தைத்துக் குலைகுலைந்து—பேரின்ப
ஆக்கமே நாடி யலைவீ ரறிவழியாத்
தூக்கமே பொன்றாச் சுகம். ௧

653. வஞ்சப் புலத்து வுழக்கற்றாக் கஞ்சமலர்
நெஞ்சத் தலத்து நிலைபெற்றாத்—துஞ்சுவோர்
மெய்ஞ்ஞான வீட்டில் விழித்தார்மற் றோர்துயின்றார்
பொய்ஞ்ஞால வல்லிருள்வாய்ப் புக்கு. ௨

—:o:—

## கஎ. அத்துவிதஞானத்திறன்

654. சிவாயநமி வென்னவகஞ் செந்தெரிய லுற்ற
தவர்தசெழும் பத்தித் தழலின் — சுவாலைச்
சுவா நுபவத் தின்கட் சுடர்வதே தோலாச்
சிவோகமெனு முண்மைத் தெளிவு. க

655. கள்ளமறச் சித்தங் கடைப்பிடித்து நானென்
றுள்ளமெனுங் கல்லூ டுராய்ந்துராய்ந் — துள்ளூட்
கனலக் கடைந்த கதிரொளியே காண்டி
அனல்ஹக் கெனுமெய் யறிவு. உ

656. அத்துவித ஞான வழுத்தமே யாண்மையலாற்
பொய்த்துவித ஞாலப் புரள்பிலே — எய்த்துமதி
தெவ்வர்மே லாண்மை செலுத்தலுமே தேருங்காற்
கவ்வுபே ரச்சமே காண். ங

—:o:—

## கஅ. திருவருட்டிறன்

657. உள்ளத்தே யுள்ளமென வோங்குந் திருவருளேல்
உள்ளுருகி யுள்ளா வுயிர்கட்கே — உள்ள தனை
எள்ளுக்குறை யேயுமலர் தின்னருள்செய் யாக்குறையவ்
வுள்ள தனுக் கெங்ஙனுறும். க

658. அறிவுண் முகமா யகந்தை யடங்கிச்
செறிவுண் மிகவொளிர்சச் சித்தே — குறிகுணந்தீர்
தான்மனு தீதமாய்ச் சார்ந்தே குருவாய்த்தோன்
றுன்மனு மீச னருள். உ

659. அருளமுதத் வெள்ளத் தமிழ்ந்துநின்ற சீவர்
மருள்வயத்தா லேதவித்து மாழ்கல்—பொருகங்கை
யாற்றுநீர் வெள்ளத் திடைநின்று நீர்வேட்கை
மாற்றறியா ராயு மடம். ரு

660. எல்லாரை யுங்கடைக்க ணிக்கும் பொதுக்கடவுள்
பொல்லாரை யேனோ புறக்கணித்தல்—எல்லாமாய்ப்
பொங்குங்கண் ணொன்றைப் புறக்கணிப்ப தில்லையவர்
மங்குங்கண் மாலை மயக்கு. ச

———:o:———

## கசுஅ. சச்சிதானந்தத்திறன்

661. அயலாய வற்றை யறிகின்ற புத்தி
மயலாய விஞ்ஞான மாற்றி—இயலாய
செம்மை யிதயத்தைச் சேரவே சித்தமாம்
அம்மெய் யறிவானந் தம். க

662. சித்தாய சித்தமது சேட்டை யொடுங்கினுற்
சத்தாகத் தன்னையே தான்காணும்—சத்தோடு
சிற்சத்தி யொன்றிச் செறிபர மானந்த
எச்சமுமத் தானன்றி யேது. உ

663. சிற்சடமாஞ் சீவன் செடவகந்தை செத்தவுடன்
சிற்சொருப மாகத் திகழ்கின்றான்—சிற்சொருபம்
தன்மாத் திரமாத் தரித்தலா லாங்கென்றும்
தன்மாத் திரவின்பந் தான். ங

664. நிலையுளபோற் றோன்றா நிலைகட் கெல்லாம்
நிலையிலதா யுள்ள நிமித்தப் — புலையகங்
காரச் சழக்குக் கழிந்ததே லிந்நிலையே
சீரக் கிடந்ததோர் சத்து. ௪

665. அறிவுளபோற் றோற்றமுடை யரிருயிர்கட் கெல்லாம்
அறிவிலதா யுள்ளதோ ராவி — வெறியகங்
கார மயக்கங் கழன்றதே லந்நிலையே
தேரக் கிடந்ததோர் சித்து. ௫

666. இன்புளபோற் றோற்றுபொரு ளின்பங்கட் கெல்லாமே
இன்பிலதா யுள்ளதோ ரேதுவாம் — துன்பவகங்
காரச் செருக்குக் கடிந்தக்கா லந்நிலையே
ஊரக் கிடந்த வுவப்பு. ௬

667. சத்துச்சித் தின்பமெனச் சாற்றினும்வெவ் வேறாக
உய்த்துணர்ந்தா லம்மூன்று மொன்றாகும் — ஒத்த
திரவமொடு மாதுரியஞ் சீதளங்கண் மூன்றும்
பொருவறுநீ ரொன்றேதான் போன்று. ௭

—:o:—

## ௨௦. உண்மைமாட்சித்திறன்

668. உளதாதல் தன்னியல்பவ் வொன்றொழிந்த வெல்லாம்
களவாய கற்பனையின் கூற்றை — உளவாகா
தவ்வெல்லாந் தன்னின் றகல்வனவா மென்றென்றும்
இவ்வொன்று நீங்க லிலை. ௧

669. அறிஞ்பட்டசித்தியினு மாசை யிலாதே
நிறைஞ்சிட்ட சாந்தப்த நேர்வன்—புறஞ்சுட்டிக்
காண்போனுத் தன்னைக் கலங்காதே யுண்மைநிலை
மாணபோனுத் தன்னையுணர் வான். உ

—:o:—

## உக. சமரசத்திறன்

670. போதாந்த மோனப் பொதுவியல்பால் விஞ்சைசேர்
வேதாந்தத் துக்கு விரோதமிலை—தூய்தாத்
தனித்தொளிர்மெய் யத்துவித சாதனங்க ளாக
அனைத்துமத மும்முடன்பா டாம். க

671. எந்தமத மீதி லிருக்கினுநம் பிக்கையுனக்
கந்தமத மெய்யன்பேர் டாசரித்தி—சொந்தமத
மீதபிமா னத்தால் வெளியிற் பிறமதமேல்
வாதமிடா துள்ளே மறிந்து. உ

672. துவிதவிசிட் டாத்துவித சுத்தாத் துவித
விவிதவழக் காடல் விடுத்துத்—தவமுதிரச்
சிந்தித் திறையையுபா சித்துத் திருவருட்சீர்
சந்தித்து மெய்யுணர்தல் சால்பு. ௩

—:o:—

## உஉ. சைசவியத்திறன்

673. ஈட்டமுறு மக்க ளினத்து ளகந்தைமதிச்
சேட்டையறி வற்ற சிசுக்களே—வாட்டமற
அம்மையப்ப ராலே யதேநினைவா யெக்காலும்
பன்மடங்கு பேணப் படும். க

674. விகாரமனஞ் சற்றும் விளையாத சுத்த
மகார்களே பாக்கிய வந்தார்—ஆகோ தியமாம்
அன்னமடி நீங்கா தமர்ந்துவிளையாடுமேகிழ்
வின்னவர்முற் றாட்டாக லான். உ

—:o:—

## உரு. ஆன்மமுயக்கத்திறன்

675. நானென்னும் புத்தி நழுவுற்று மெய்ஞ்ஞான
வானென்னு மான்மவரன் மாட்டொன்றித்—தானென்
றவனென்று சொல்லிரண் டற்றநிலை தானே
சிவமொன்று கற்பின் சிறப்பு. க

676. யானவனென் றோது மிருவகைநோக் கொன்றியவம்
மோனமுயக் கிற்பேச்சு மூச்சுண்டோ—நானறவே
கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனு மில. உ

—:o:—

## உசு. சைதன்யமாட்சித்திறன்

677. அகங்கார மாஞ்சுட் டறிவா னயல்போற்
சகங்காணு ஞானஞ் சடமே—அகங்காரம்
செத்தாற் றுலங்குமே சித்தமூ லத்துணர்வாம்
சுத்தாத் துவிதச் சுடர். க

678. திகந்தபூர்.வத்திற் றினகரனேப் மட்டே
இகந்தனிலவ் விந்து விறுமாப்—பகந்தை
மயலுணர்வோ யச்சின் மயவுணர்வேய் மட்டே
உயிருணர்வின் வீறுப் புணர். உ

679. உதயார்த் தமன முருத்தகிதூர காச
இதயாத் துமப்பே ரிரவிக்—கெதிரே
அகன்ஞாலத் தான்ம வறிஞர்மனம் பட்டப்
பகன்மதியங் காணும் பரிசு. ௩

680. இலகுகண் ணாடியொளி யேய்க்கு மயல்சேர்
உலகை யொளிர்விக்கு முள்ளம்—குலவும்
கதிரொளியே கண்டீரவ் வுள்ளத்தி னுண்மை
உதிதருபே ரான்ம வொளி. ௪

———:o:———

## ௨௫. ஞானவெளித்திறன்

681. பூதலத்தே யோடோடிப் புண்ணியரைக் கண்டிறைஞ்சி
ஆதரத்தோ டுண்மையினை யாராய்வீர்—மாதவத்தோர்
திட்டமுறச் சிந்திக்குஞ் செம்பொருளைச் சோதித்தால்
வெட்டவெறு ஞான வெளி. ௧

682. காசினியைச் சுற்றிக் கடுக வலம்புரிந்து
தேசிகரைத் தேடிப்போஞ் சீடர்கட்—காசிரியத்
தந்தைமார் காட்டித் தருவதுதான் கண்டக்கால்
விந்தைசேர் ஞான வெளி. ௨

683. சட்டை யுரித்திட்ட சர்ப்பமெனச் சங்கற்பக்
கட்டை யொழிக்குங் கலங்காத—நிட்டையிடை
முற்ற முடிய முயன்றால் வெளிப்படுதல்
வெற்றவெறு ஞான வெளி. ௩

684. அடர்ந்தமுளி காலெனன் நகஷண்டமரிய் பற்றிப்
படர்ந்தெரிய துற்ற வரிசரிந்—கடந்த
சிதாபாச சீவனறச் செத்தீசுடு கூடாம்
இதாகாய சோதிச் சிறப்பு. சு

685. குற்றங் கெடுக்குங் குருவருளா லல்லான்மற்
றெற்றாலுங் காண்ட லெளிதன்றே—மற்றதும்
மாணக் கிடையாத மாட்சிசேர் மெய்ஞ்ஞான
வானத் தலத்தின் வளம். ரு

686. வானத் தலத்தின் வளங்கண்டார் பேரின்ப
மோனச் சிவமா முடிகுவார்—மானச்
செருக்கோடு மற்றைச் செருக்காலே மேன்மேற்
பெருக்கும் பிறப்புப் பெயர்ந்து. சு

687. உண்டுயிர்த்துக் கண்டுகேட் டுற்றுணரு மைம்புலனும்
பண்டமெலாஞ் செய்யப் படுபொருளாக்—கொண்ட
பயனில்லையா நின்றபரா சத்திக் கெழுவாய்
வியனில்லையா ஞான விசும்பு. எ

——:o:——

உசு. சிற்றம்பலத்திறன்

688. எங்கெங்குந் தானா யிருந்தொளிர்சிற் றம்பலத்தை
அங்கிங்குந் தேடி யலைந்திடுதல்—பங்கமுறும்
பான்மதியின் மேதகவாற் பட்டப் பகலிடையே
வான்சுடரைத் தீத்துரீஇ யற்று. க

689. அகமும்பொய் யல்லா விதமும்பொய் யந்த
அகமிதத்தைக் காணு மறிவும்—மிகவும்பொய்
முப்புடியுந் தோற்றுறு மூலப் பகுதியும்பொய்
அற்புதச்சிற் றம்பலமே மெய். ௨

690. பம்பிப் பரந்து பலவுலகுந் தோற்றுஞ்சிற்
றம்பலமாந் தந்நிலைபொய் யாயொழிய—ஐம்புலத்தாற்
காண்பனதா மெய்யாக் கருதிக் கலங்குவார்
மாண்பய னெய்த லரிது. ௩

691. சித்தமலங் கெட்டுச் சிவமயமாய்த் தாமொளிரும்
வித்தகர்தா மல்லாமல் வேறுரே—உய்த்துணர்வார்
குற்றங் குறையொன் றுங் கூடாப் பெருமைசால்
சிற்றம் பலத்தின் சிறப்பு. ௪

——:o:——

## ௨எ. அறிவுறுத்ததிறன்

692. அன்னதா லந்தச்சிற் றம்பலமே யாராலும்
பன்னலா காமெய்ப் பரசிவமாம்—என்னவே
தேர்வித்தா னென்னைச் சிவமயமாந் தன்னிலையைச்
சேர்வித் தகாமண தேவு. ௧

693. தன்னுருவாம் போழ்தத்துத் தன்னுருவாந் தானத்துத்
தன்னுருவாந் தானெய்தத் தானுவந்து—தன்னுருவாம்
தன்னைத் தனதுருவாந் தான்காட்டித் தந்திடலும்
தன்னுருவாந் தன்னையுணர்ந் தான். ௨

——:o:——

## உ௯. ஆன்மநிலைத்திறன்.

694. உலகை யொளிர்வித் தொழிக்குமகங் காரம்
இலகுதன் மூலமே தென்றுட் — குலவுமுளத்
தீர்க்கமொடு வீறி யொளிருந் தற்போதமே
நீக்கமறு தன்மெய்ந் நிலை. க

695. சுட்டுணர்வாற் றன்முன்னர்த் தோற்றும் பிறவற்றைச்
சுட்டுணர்வா லேங்கிச் சுழலாதே — துட்டமனம்
சுட்டுணர்நா னென்றெனத்தற் சுட்டியுசாய்த் தன்மெய்க்கண்
நிட்டையே யுண்மை நிலை. உ

696. எந்நிலையிற் போனாலு மெந்நிறத்தில் வந்தாலும்
தந்நிலையிற் றாமிருப்பார் தக்கோர்கள் — தந்நிலையே
மெய்ந்நிலையா மல்லாமல் வேற்று நிலையனைத்தும்
பொய்ந்நிலையே யன்றோ புகல். ௩

(கலிவிருத்தம்)

697. ஆன்மநிலை யொன்றேமெய் யன்புநிலை யல்லால்
வான்முளரி போற்பரத்து வைகுநிலை யெல்லாம்
கானலுறு நீர்நிலைபோற் கற்பனையாற் றோன்றி
மேன்மயலை யூட்டுமன மித்தைநிலை தாமே. ௪

(நேரிசை வெண்பா)

698. இயல்பாந்தன் மெய்யேபே ரின்பா யிருந்தும்
மயல்பாய வஞ்ச மனத்தால் — அயல்போய்
நிதனையா நின்றின்ப நேட்டலே யின்பாம்
அதனை யிழுப்பிப்ப தாம். ௫

699. ஆன்மாச மொன்றே யதிரூபமென் றாய்ந்ததனால்
ஆன்மநிலை நின்றா ரறிவுடையார்—ஆன்மசுகம்
ஒன்றா வுயர்ந்தவ் வுறுதியென் றோராதார்
நின்றா ருலக நிலை. ௬

700. தந்தமுரு வின்பமெனத் தாமுணர மாட்டாரே
கந்தமிரு கம்போற் கலங்குவார்—தந்தமுரு
நன்றா யுணர்கிற்பார் ஞாலத்தை நாடாது
நின்றார் தமது நிலை. ௭

701. சுகமென்ப தான்ம சொரூபமே யான்ற
சுகமன்றி யில்லை சொரூபம்—சுகமென்ப
தொன்றே யுளதவ் வுறுதியுணர்ந் தான்மநிலை
நின்றேதுய் யின்ப நெடிது. ௮

—:o:—

௨௯. ஆன்மவலத்திறன்

(15) அறிவுண்மை நிட்டனா மான்மவித் தாவான்
அறிவாற் புலன்செற்றா னார்தான்—அறிவங்கி
ஆவ னறிவாங் குலிசத் தான்கால காலனவன்
சாவினைமாய் வீரனெனச் சாற்று. ௧

—பகவான்

702. அடங்கலற்ற மீக்கிளர்ந்த வான்மநிட்டை யாலந்
தடங்குசெற்ற ஞானவர வோனே—மடங்கலற்ற
கூற்றடர்த்த ஞான குலிசத்தான் மாச்சரியத்
தோற்றமறு ஞானச் சுடர். ௨

703. ஆறு பொறிவழியா யண்டமெலாங் கண்டாளும்
வீறு படைத்தவக வெஞ்சூரைச்—சீறி
மடக்கியித யத்து மடித்தோனே பேரின்
படிக்குங் குமார னிறி. ௩

—:0:—

௭௦. ஆன்மசொரூபத்திறன்

704. ஓவியமா மிந்த வுடலோநா மென்றிருப்பீர்
ஓவியந்தான் யாதேனு முன்னுமோ—ஆவியே
உன்னுவதூஉ முன்னு தொழிவதூஉ மாதலால்
அன்னதே நாமென் பது. க

705. உடம்புநா னென்னுமுயி ரவ்வுடல்வே றென்ன
உடம்பெனக் கொண்டவ் வுயிருள்—நட்டம்புரியும்
வேறுயிரொன் றுண்டென்னின் மெய்யுயிரா மஃதன்றி
வேறுயிர்க ளுண்டோ விளம்பு. உ

706. ஓரப் படுமுலக முண்மையே யாகவலா
தோருமனக் கற்பனையா வுற்றொழிக—ஒரும்
உணர்வுருவா நீயங் குளையன்றோ சுத்த
உணர்வதுவே யான்ம வுரு. ௩

707. வேறொன்றைச் சற்றும் விரும்பா ததுதானே
ஊறின் றுளனுனென் றுள்ளொளிரும்—வீறொன்றும்
உண்மையள வாமந் நிருபா திகவுணர்வே
திண்மைசேர் தன்மெய்த் திறம். ச

708. முப்புடிக் ளாக முயங்குந் தொகைபலவுள்
எப்புடியுந் தன்னைவிட் டின்றேனும்—அப்புடியுள்
ஒன்றும்மே தானின் றவற்றுக் கெலாமிடனு
நின்றதே தன்மெய்ந் நிலை. ரு

709. சூக்கமாய்த் தூலமாய்ச் சூனியமாய்ப் பூரணமாய்
ஏக்கமா யேங்கா விறுமாப்பாய்—நோக்குறு
தொந்தமெலாந் தோற்றற் கிடனு யிருப்பதோர்
அந்தமிலாப் பேரறிவே யான். சு

710. பொய்யாகப் பலரன் புறப்பட் டிருவினையும்
செய்யாமே செய்துழன் று சிந்தைதரும்—கையாற்றால்
எய்யாமே யெய்த்தற் கிடனு யிருப்பதொரு
மெய்யான சின்மயமே தான். எ

711. இருக்கின்றே னென்னு மியல்பளவர் யூனச்
செருக்கின்று முண்மைத் தெளிவாய்—அருக்கன்றன்
மானவே தான்றனுய் மன்னி விளங்கிதய
வானமே யான்மா மதி. அ

712. இசையே மூனுக்குந் தானின்றமைய்யா துட்சேர்
இசையாஞ் சுருதி யெனவும்—விசையால்
அசையோ வியங்கட் கடிப்படமே போன்றும்
வசைதீர்ந் துள தான்ம வஸ்து. கூ

713. பொய்யெவற்றி னுள்ளுந் தான் பொங்கலாற் பல்வேறும்
பொய்யவற்றை மெய்போற் புலப்படுத்திப்—பொய்யவற்றின்
பெய்குறிபோல் வாராமற் பேராம லெங்குநிதம்
வைகுவதே யான்மபர வஸ்து. கO

714. எவ்வெவ் வுயிருள்ளுமேய்ந்து மதிப்பீட
தவ்வவ் வுயிரையுடம் பாகக்கொண்டு—செவ்வே
இமையா தயரா தியக்கு மவனே
அமுதனு மந்தரான் மா. கக

715. எழலும் விழலு மியல்பெனக்கொண் டென்றும்
உழலுமகங் கார வுயிராய்ச்—சுழலும்
சகடக்கா லன்றி சலியா துளமெய்
அகடச்சே யான்மா வறி. கஉ

716. அவகடந்துன் றவ்வகத்தை யாய்ந்தடங்கத் தோன்றும்
சிவனடஞ்செய் காட்சித் திறனென்—றபரிடங்கள்
ஓலமிடுந் தெய்வவரு ளுண்மைத் தெளிவாய
வாலறிவே யான்ம வடிவு. கங

717. யானென்னு மெண்ண மிறையு மொழாவிடமே
மோனஞ் சொரூபமென்பர் மூதறிஞர்—மோன
சொரூபமே யீசன் சொரூபமே சீவன்
சொரூபமே யித்தொல் லுலகு. கச

718. ஆனவுல கீசனுயி ராயவற்றுக் கெப்பொருட்கும்
வானமென மேவுண்மை மாத்திரமெய்—தானே
பரசுமனு தீதப் பரந்தாம மென்னும்
பரசிவமா மான்மசொரூபம். கரு

——:o:——

## ௫௧. ஆன்மமாட்சித்திறன்

719. தானே மகத்தன்றித் தன்னினுமே மிக்கதாம்
ஏனை மகத்தொன்றி மில்லையே—ஆனதால்
எற்றுத் திறத்தாலும் யாங்காணேந் தன்னைத்தான்
வற்றுக் கொளத்தக்க வேறு. ௧

720. இருந்தொளிர்மெய்ஞ் ஞான வெழின்மணியா மான்ம
அருந்தனத்தை யாராய்ந் தகத்தே—பொருந்தின்
அயாமூல மாம்பிறவி யல்லலற மாயும்
வியாமோக மென்னு மிடி. ௨

721. அந்த மணியி னருமையறி யாமையினே
மந்தராய்ச் சோம்பி மடிகின்றார்—தந்தம்
உரிமையா மத்தை யுளவறிந்து பெற்றார்
பெரியார்பே ரின்பமுற்றார் பேண். ௩

722. ஞாலமட மாந்தர் நயக்குமணி மாதிசித்தி
ஏல வொருங்கே யிசைந்தாலும்—மூல
முடிச்சவிழ்த் தான்ம முழுமணியெய் தாதார்
படிச்ச படிப்பனைத்தும் பாழ். ௪

723. ஒளித்தகட லுட்சிந்தை யொன்றிக்கல் லோடு
குளித்துயர்நன் முத்தைக்கைக் கொண்டு—களித்தாங்
கிதயத்துள் வைராக் கியத்தோடாழ்ந் தான்ம
நிதியத்தைப் பெற்றவல நீங்கு. ௫

—:o:—

## ௩௨. ஆன்மபரத்திறன்

724. பல்வகையா மூர்த்திகளைப் பார்த்துப் போற்றியோடு
சில்பொழுது சிந்தையாற் சேம்மாப்பார் — நில்லாத
பொய்ம்மையா மெய்யையலாற் பொய்ம்மருவா மெய்ம்மையமாம்
தம்மையே தாமுணரா தார். க

725. பெற்றதா வன்றிப் பிரிந்ததாப் பேதுறுவார்
உற்ற துயிலோ வுணர்வினிடைச் — சற்றும்
தெரியா ததற்குந் தெரிவதற்கு மொப்பக்
கரியர்கத் தம்மைக் கலார். உ

726. தேற்று முபாசனையாற் சேருந்தெய் வம்பலவும்
தோற்றமறை வுற்றுத் தொலைதலாற் — றேற்றமோ
டென்றுமுள தாந்தன் னியற்கையே மாறாது
நின்றபர தெய்வ நிஜம். ௩

727. ஆன்மபர தத்துவமல் லாதபிற தத்துவத்தைத்
தான்மபங்கி யாய்ந்து தடுமாறல் — ஊன
மயிர்வினைஞன் குப்பையை வாரித்தள் ளாது
செயிர்ப்படநன் காய்ந்த திறம். ௪

———:o:———

## ௩௩. அத்துவிதத்திறன்

728. ககனமா மொன்றே கடமடத்தா லவ்வக்
ககனமாக் காண்டல் கடுப்பச் — சக்கனசித்
துண்மையா மொன்றே யுயிரிற்றாக் காண்டலினவ்
வுண்மைவே றாகா துணர். க

729. சீவ னெனவுஞ் சிவனென்று முண்மையிலே
யாவது முண்டோ விருவேறு—மேவும்
அமிழ்த் னியன்றவாண் டானடிமைப் பாவை
தமிழ்வேறு பாடுண்டேற் சாற்று. உ

—:o:—

## ௩௪. ஆத்திகத்திறன்

730. எய்த்த சொரூப மிதுவென் றகந்தெளிந்து
சுத்தமா முண்மை துலங்குற்ற—புத்தன்
ஒருவனே யாத்திகனென் னும்பெயர்க்கு மெய்யே
அருகனு கின்று னறி.

—:o:—

## ௩௫. அநாதிமலமுத்தத்திறன்

731. வானுடல மாக வழங்குற்ற மெய்ஞ்ஞான
பானுவாந் தம்மெய்ப் பரிசுணர்ந்தார்க்—கூனுடல
மோகாந்த கார முயங்கியதே யின்மையாற்
றேகாந்தர்க் கேதிமிரந் தேர். க

732. செயக்கடவ் தாமுசாத் தேர்ஞானம் பாச
மயக்கடுசீ வன்பாலே மன்னும்—மயக்கற்
றனுதிமல முத்தமா மத்துவிதான் மாக்கண்
மனுதுமல போத மயக்கு. உ

733. நிசரதமா வெங்கு நிறைந்திருக்கு மான்மா
மசரதமா மாயையாற் கட்ட—வசப்படுமோ
பந்தப்பட் டாற்போற் பதருதே யாறமரச்
சிந்தித்துத் தேறத் தெளி. ௩

—:o:—

## ௭௬. சதாசாரவாழ்க்கைத்திறன்

734. தவற்றுமன மாயைத் தடுமாற்றஞ் சீயங்
கவற்றுமுனி வார்வங் கடிந்தே—எவற்றும்
உதாசீன மாக வொழுகலே நன்றும்
சதாசார வாழ்க்கை தரி. க

735. தம்பார முற்றமரன் றாள்சேர்த் துதாசீன
கம்பீர வாழ்க்கைக் கடைப்பிடித்து—மொய்ம்பாரும்
சொச்சந்த மாகத் துலங்குமறி வாளரே
சச்சந்தர் பாக்கியவந் தர். உ

736. ஐயுணர்வாற் காணு மகிலமெய் யாநம்பி
நொய்யபுலன் மேற்பாயு நோக்கத்தால்—மையல்
உருப்பாரைப் பற்று முயிர்ச்சேட்டை யற்றுச்
சரிப்பார்க்கு வேண்டா தவம். ௩

—:o:—

## ௭௭. நிட்களத்திறன்

737. உருவந்தா னாயி னுடையோனு மாதி
சொருபந்தா னும்மற்றே தோற்றவிதாம்—உருவந்தான்
அல்லா விடினே வயலறிவே கூடாதேல்
ஒல்லுவதா மோவவ் வுரை. க

738. நினைந்துநினைந் தன்பர் நெடும்பா வனையாற்
புனைந்தவுரு வேதான் பொருந்தல்—அனந்த
உருநாம மேவினுமா யோபாதி யான்மெய்
அருவா மறிவே யரன். உ

739. சும்மா விருந்திதபின் சேர்லும் பராவாக்காற்
செம்மையின் பொருளனுசந் தித்தலே—பொய்ம்மாய
விண்மை யுருப்பெயர்போய் மேவுமுளத் துள்ளொளியாம்
வண்மையுறு மாதிபர வாழ்த்து. ௩

740. அவ்வநுசந் தானஞா னசாரர் செய்துதியாம்
எவ்விதனு ளுக்கு மிதயந்தான்—செவ்வியதாம்
அந்தப் பரம்பொருளி னன்றிப் பெயர்வடிவாம்
எந்தத் திறத்திலுமே யின்று!. ௪

741. மதியிரவி தம்மின் மணந்தாலே போலப்
புதியவியப் பாகுமிறும் பூதால்—இதயமுறக்
கொஞ்சியடி யாரைக் குசலவுசா வாற்றுநடன்
குஞ்சிதவண் பாதக் குலா. ௫

742. திகந்தமெலாஞ் சுற்றித் திரிந்துபட ருற்றும்
இகந்தனிலே மாழ்கலறி வீனம்—அகந்தை
தருமசைவு மாய்க்குஞ் சதாசிவமா மோனப்
பரமசிவன் பாதம் பயில். ௬

743. அறிவோ டிதயத் தடங்கினா ரல்லால்
மிறைதீர்ந்த வுண்மைநிலை மேவார்—முறையே
உறக்கத்தோ டேனைவிழிப் பூடுமனத் துக்கு
மறப்புநினைப் பான்மெய் மறைந்து. ௭

——:o:——

### ௩௪. சகஜநிட்டைத்திறன்

744. விவகாரி நிட்டைத்துயின் மெய்யுளியில் பாத்தூங்
கவிகார ஞானி யுறியான்—உப்விமீது
வூண்டிச் செலவுநிலை மற்றைக் கிடையத்துட்
கண்டுயில்வோன் காணுன் சுரி. ௧

(16) வண்டிதுயில் வானுக்கவ் வண்டிசெல
னிற்றலொடு
வண்டிதனி யுற்றிடுதன் மானுமே—
வண்டியாம்
ஊனவுட லுள்ளே யுறங்குமெய்ஞ் ஞானிக்கும்
ஆனதொழி னிட்டையுறக் கம். ௨
—பகவான்

745. சான்று யிருந்தொளிருஞ் சான்றோர்தஞ் சுத்தமனம்
மான்றோராய் மாந்தர் மதிமருளத்—தோன்றயலார்
கோட்டம் படிந்தமனக் குற்ற நினைவுக்ளும்
காட்டும் படிமக் கலன். ௩

746. சத்துவமுந் தாண்டிச் சரிக்குஞ் சகஜர்கர்த்
தத்துவமுன் னிட்டுழல்வார் தங்கண்ணுக்—கெத்துமிகத்
துன்னு மிராஜதர்போற் றோற்றலாற் சிற்சிலகால்
அன்னதுகொண் டையுறு தே. ௪

747. இம்மை மறுமைக் கிரும்பாவ மும்பழியும்
சும்மையா வீட்டிச் சுமப்பரால்—செம்மைக்
குரியரா யோரு மொளிர்ஜீவன் முத்தப்
பெரியார்ப் பிழைத்து விடின். ௫

748. செக்குச் சிவலிங்கந் தேரா தொருங்கொக்க
நக்கிப் பிழைக்குங்கீழ் நாயனையார்—பொக்கர்
விழுமியார் தம்மையும் வேறு வுணரா
தொழுகுவா ரொக்கப் பிழைத்து. சா

749. சூரியனை நோக்கிச் சுணங்கன் குரைக்கினுமச்
சூரியனை நிந்தை தொடராது—சூரியன்போல்
வீரியமெய்ஞ் ஞானவொளி மிக்கோரை மேவாது
பூரியர்தம் புன்சொற் பழி. எ

———:o:———

௲௬. கிரந்திபேதித்தார்திறன்

750. சுட்டறிவாற் சிந்தை சுழல்பா மரர்விடயக்
கட்டா முலகெங்குங் காண்பதுபோல்—விட்டே
அடிச்சித்தான் மாவெங்கு மார்ந்தொளிரக் காண்பான்
முடிச்சவிழ்த்து நின்ற முனி. க

751. என்றுமான் மாவி னிறுமாந் திதயத்தே
நன்றுநிலை பெற்றமெய்ஞ் ஞானிதான்—தன்றாம்
மயலென்று மெண்ணான் மகிதலத்தைத் தன்னின்
அயலென்று மெண்ணு னறி. உ

752. தொடர்பரிந்த கத்தத் துவத்தாலே ஞானி
கடவ்தாச் செய்கன்மங் காணான்—சடமாம்
அயலணுவுந் தோற்று வறிவாலே மைய
மயலணுவுந் தோற்று மற்று. ந

753. உண்டுயிர்த்துக் கண்டுகேட் டுற்றுண்ருஞ் ஐம்புலத்திற்
பண்டுபோரு லாக்ப் பின்ருலும்—மண்டும்
உசாவுரத்தால் விண்டதே யுண்மையொளி யாலே
வசீகிரிக்கப் பட்ட மனம். ௪

754. மறிகடலோ டொன்ரு மருவுநதி மாறிப்
பிறிபடுத லில்லாத பெட்பே—அறிவுருவாம்
ஆன்ம சொரூப மடைந்த வுயிர்க்கில்லை
தான்மயங்கி மீண்டுஞ் சனிப்பு. ரு

755. மூன்றொருகான் மூல முடிச்சவிழப் பெற்ருனேற்
பின்ஞெருகா லத்தும் பிணைபடான்—தன்னியல்பாம்
ஈதே யிறைமையிலை யீதே திறலாட்சி
ஈதே யுபசாந்த மெண். சா

—:o:—

## ௬0. சான்ருேர்மாட்சித்திறன்

756. சித்த நசித்துச் சிவமயமா நிற்கின்ருேன்
ஒத்துயிரு ளெல்லா முடனுறைவோன்—முத்தனைத்
தெள்ளு மவன்சொரூப சிந்தனத்தால் விண்டொளிரும்
உள்ளிருந் துண்மை யொளி. க

757. சாவாதெஞ் ஞான்றுஞ் சதோதயமாய்ப் பொங்குபர
வாழ்வாமெய்ஞ் ஞான மலிந்தோர்தம்—பார்வைநீர்
ஆடினார் தம்மை யமரகதிக் குய்த்திடுமஃ
தீடிலா ஞானமெளி தீந்து. உ

758. சாந்தி நிறைந்து ததும்புமுளச் சான்றோர்பால்
ஏய்ந்தவர்தஞ் சித்தமிலா மின்பமாம்—தோய்ந்த
குதுகலஞ்சே ரன்னார் குளிர்ந்தமுக மன்றோ
மதுகரஞ்சேர் செந்தா மரை. ௩

——:o:——

## ௪௬. வாதனைமாண்டார்திறன்

759. கலங்கு மனத்தாற் கடையாய நாற்கால்
விலங்கொடுபுள் ளாதியுயிர் மேவும்—இலங்கொளிசேர்
யாவனது சிந்தையெவ் வெண்ணத்தா லும்மன்றி
வாழ்வதோ வாழ்வா னவன். ௧

760. மெத்தவிவ காரங்கண் மேவித்தாஞ் செய்தாலும்
சித்தமன வாதனையார் செய்யாரே—சித்தநெடுந்
தூரஞ் செலவிடுத்தார் தொல்கதைதாங் குந்திநெடு
நேரஞ் செவிமடுப்பார் நேர். ௨

761. வாளா விருந்துமன வாதனைமா ளாராயின்
ஆளா யனைத்துந்தா மாற்றினரே—வாளா
கிடந்துங் கனவிற் கிரியேறிப் பள்ளத்
திடந்தலைகீ ழாவிழுவா ரேய்த்து. ௩

(17) செய்மையுளுஞ் சென்றுகதை கேட்பார்போல் வாதனைகள்
தேய்மனஞ்செய் துஞ்செய்யா தேயவைகள்—தோய்மனஞ்செய்
தின்றேனுஞ் செய்ததே யிங்கசைவற் றுங்கனவிற்
குன்றேறி வீழ்வார் குழி. ௪

—பகவான்

——:o:——

## ௪௨. ஜீவன்முத்தர்திறன்.

762. கத்தத் துவங்கெடினுங் கன்மமுந் தங்கழன்ற
முத்தரெனக் கூறன் முறையீரோ—மற்ற
விருத்தியா லுண்டு வினைசெய் துடலம்
தரித்துக் கிடப்பார் தமை. க

763. அடைந்தவினைக் காளாகி யப்பெரியோர் தாமும்
இடைந்துபடக் காண்டுமே யென்னின்—இடைந்துபடல்
பார்ப்பார்தந் திட்டிப் பரிசன்றி யன்னார்தம்
நோய்ப்பால்சொன் னாரோ நுவல். உ

764. அந்தப் பெரியோ ரதீதமா வுள்ளதையே
சொந்த சொரூபமாத் துய்ப்பாரா—இந்தஜடர்
நோய்ப்பா லுடம்புருவா நோக்கலே யன்னோரைப்
பார்ப்பார்தந் திட்டிப் பரிசு. ௩

765. கத்தத் துவங்கழன் றா கத்தன் பணிநின்ற
முத்தப் பெரியோரை முன்னித்தாம்—நத்திப்
புகழ்வார்பாற் புண்ணியமும் போற்றாதன் னோரை
இகழ்வார்பாற் பாவமும்போ மெண். ௪

766. கன்மமெவ் வாறியலுங் கத்தத் துவங்கழியிற்
கன்மநடை பேறுநாங் காண்டுமே—என்னினோ
மாய்ந்தவகைப் பற்றான் மகேசனே தம்முளத்துத்
தோய்ந்துசெயப் பெற்றார் துணி. ௫

767. ஜீவன்முத் தப்பெரியோர் செய்கை யகமதை
யாவுந்தீர் மோன லகரியால்—ஆர்வ
உறக்கத் திடையெழுப்பி யுண்பிக்கப் பட்டுச்
சிறக்கர் புசிக்குந் திறம். ௬

768. வீழ்ந்தசிறீ ஐந்துதலை மேலெடுக்க வொட்டுமோ
ஆழ்ந்தாடல் வேலை யழியுங்காற் — றாழ்ந்தவுடல்
ஊன்வக்ர காரமெழ வொட்டுமோ மெய்ஞ்ஞான
மோனமுழு வெள்ள முகத்து. ௭

769. இறந்தும் பிறந்துமுழ லின்னுயிர்தன் னுண்மை
மறந்தவுயிர்ப் பாமெழுச்சி மாய — அறிந்தடங்கல்
ஆவன்முற் றச்செய் தடையமிசுத் தக்கதாம்
ஜீவன்முத் தானுபவச் சீர். ௮

770. கத்தத் துவங்கெட்டுக் கத்தனுந் தம்புருடன்
செத்துமவன் மூவினையாந் தேவிமார் — ஒத்தே
அமங்கலியா காதிருவ ராயொருத்தி மட்டும்
சுமங்கலியா வெஞ்சுவளோ சொல். ௯

(குறள் வெண்பா)

(18) பத்தாபோய்க் கைம்மையுறப் பத்தினியெஞ் சாதுபோற்
கத்தாபோர் மூவினையுங் காண். ௧௦

—பகவான்

(நேரிசை வெண்பா)

771. வினைநுகர்ச்சி யேயுடலா மேவினு லார்க்கும்
வினைநுகர்ச்சி யின்றேல் விழாதோ — எனவுரைப்பிற்
பூத வுடலம் புலப்பட்ட தாருக்கோ
நீத முறநீ நிகழ்த்து. ௧௧

772. நிகழ்ந்தசெம் பட்டுமூடி நீருகி யுண்மை
இகந்துமிக வாத்தேர்ற மேய்க்கும்—அதந்தைச்
செயிர்தீரப் பெற்ற செழுஞ்சிவுஞ் முத்தி
உயிரோ டுடம்பி னுரு. கஉ

—:o:—

## சாங. ஞானியர்திறன்

773. நனவாய தன்னை நழுவிப்போய் மாயக்
கனவாகக் காணு முலகை—நனவாகப்
போற்றும் புலவரும் வேறே தமையுணர்ந்து
தேற்றும் புலவரும் வேறு. க

774. நுனித்து நுனித் தெத்தனை தீர நோக்கினுமெய்ந் நூல்கள்
தனைத்தனினற் காயவே சாற்றும்—மனித்தன்
கடிமுகங்கண் டுள்ளங் களிப்பதே யன்றே
படிமக் கலங்காண் பலன். உ

775. வேத்தியமாந் தம்மை விளக்குலுறு மெய்ஞ்ஞான
சாத்திரமாந் தர்ப்பணத்தைச் சார்ந்தாருட்—சூத்திரமா
பாடியத்தைப் பார்ப்பார் பலராகத் தம்மியலைத்
தேடியறிந் துய்வார் சிலர். ங

776. மெய்ஞ்ஞானி வேறேயம் மெய்ஞ்ஞான நூலுணர்ந்த
விஞ்ஞானி வேறே விளம்புங்கால்—அஞ்ஞானக்
கட்டறக்காண் பார்க்குக் கலைஞரைநீத் தான்பர
நிட்டர்பாற் சேர்தலே நேர். ச

—:o:—

## ௩௪. ஞானிகள்கன்மத்திறன்

777. தொழிலறலே ஞானத் துணிபேற் றெழுவாற்
றெழில்றலு ஞானத் துணிபே—தொழிலின்
உவப்புவர்ப்பு நீத்துள்ளத் தோர்பொறுப்பு மில்லா
நிவப்பதுகாண் ஞான நிலே. க

778. இருத்தலே தம்மெய் யியல்பென் றுணர்ந்து
கருத்தறுகம் பீடநிலை கண்டோர்—பொருத்த
பலகா ரியங்கள் பயிற்றினுங்கர்த் தாவா
மலகா ரகர்த்நர் மதி. உ

779. கருவி கரணசங் காதமே செய்கை
புரியும் வினைமுதலாப் போக்கிப்—புரிவனவாய்
வைகுமவற் றோடெவ் வகைத்தொடர்பு மில்லறிஞன்
செய்குறினுஞ் செய்கலா தான். ௩

780. போந்ததுகொண் டுள்ளம்பூ ரித்தோராய்த் தொந்தமெலாம்
நீந்தினராய் மாச்சரிய நீங்கினராய்ச்—சாந்தநிலை
துன்னினராய் வெற்றியொடு தோல்வியிடை யாற்றுமவர்
கன்மமதாற் கட்டுண் கலார். ௪

(குறள் வெண்பா)

(19) எய்தலின் புற்றழுக்கா றிற்றிரட்டை
யெற்றுசமன்
செய்திடினுஞ் சிக்கற்றான் றேர். ரு
—பகவான்

——:o:——

## சரு. தன்மயர்சால்புத்திறன்

(நேரிசை வெண்பா)

781. சேணிற் கிடந்தொளிர்சச் சிவ்வூர் பெருமையைத்தம்
மோணத் தகாப்புன் மயலாலே—காணிப்பல்
சித்திகள்கற் பித்துச் சிறுமைப் படுத்துறுமுன்
மத்தர் மலிந்த துலகு. க

782. தன்மயராம் பூரணர்க்குச் சித்திகளாற் சால்புரைத்தல்
இன்னுமையுஞ் செங்கதிரின் றன்னனுச்சீர்—வன்னம்
நிகழ்த்துவத னாலே நிறைசுடர்ஞா யிற்றின்
மகத்துவநன் கோதன் மதி. உ

—:o:—

## சசு. மவுனமாட்சித்திறன்

783. வாலிதா மெய்ஞ்ஞானி மாட்சி யுளிப்பதாய்
ஏல்புடைய வெல்லா வெழுத்துக்கும்—மூலமாய்
*ஓரெழுத்தென் றந்தா னுள்ளத் தொளிர்வதாம்
ஆரெழுத வல்லா ரஃது. க

784. சாலத் தெளிவுடைத்தாய்ச் சத்தியமா யெம்மொழிக்கும்
மூலமாந் தெய்வ மொழியினவின்—ஆலடியின்
ஞான சொரூபமா நம்பனுப தேசிக்கும்
மோனமே யந்த மொழி. உ

785. ஒன்றுமதி யூக்த்தா லுண்டின் றிருவருவென்
றென்றிரண் டென்று முரையாடா—தென்றும்
தவ்விலது பூதியாஞ் சச்சிதா னந்த
மவுனமே யுண்மை மதம். ௩

---

* இவ்விரண்டடிகளும் பகவான் திருவாக்கு.

786. மாக்கடல்வாய் நீயாடி மடுக்குநதித்திரள்போற்
றேக்குசிதா னந்த சிவாம்புதிக்கே—நோக்கமாச்
செல்லுமத மெல்லாஞ் சிவமயமா மாதலால்
இல்லைப்பே தத்துக் கிடம். ௪

787. கொள்கைக்கட் பேதங் குறித்ததா லுரெனுமக்
கொள்கைகுறிக் கொண்டொழுகுங்காலை—உள்ளதனை
அன்றிநா னின்றி யழிதலா லம்மோனத்
தோன்றுமோர் பேத வுணர்வு. ரு

788. ஒன்றுதேற் பேத வுணர்ச்சியம் மோனத்துள்
ஒன்றுமோ மற்றை யுணர்ச்சிதான்—என்றாலோ
பேத வுணர்ச்சி பிரிதலே மெய்யறிஞர்
ஓது மபேத வுணர்வு. சா

789. ஊன விளைவிடைக ளுண்மை துவிதமொழிக்
கானதா மன்றி யறியுங்கால்—மோனமாம்
அத்துவிதச் செம்மொழிக்க ணந்த வினவிடைகள்
எத்துணையு மெய்த விலை. எ

(குறள் வெண்பா)

(20) இத்துவித பாடையி லேயே வினவிடைகள்
அத்துவிதத் தின்றே யவை. அ

—பகவான்

(நேரிசை வெண்பா)

790. யாங்கெய்தி நின்று லிருவினை முங்கலக்கும்
ஆங்கெய்தி நிற்றலே யாயுங்கால்—பாங்கெய்தும்
கூரார்ந்த கேள்விக் குலாவுடையோர் தம்முளிடை
பேராது பேசுறுமெய்ப் பேச்சு. க௰

—:o:—

## ௪௭. சுத்தமவுனத்திறன்

791. அத்துவிதச் செம்பொருளா மான்மசொருபத்தைமுழுச்
சித்தமொடு நீக்கமறச் சிந்திப்பே—சுத்தபர
மோனமா மன்றிவெறு மூடமனச் சோம்ப லுணர்
வூனமா மோகமே யோர். க

792. எழாதசெஞ் சொல்லா மெழிற்பிரா வாக்கால்
வழாது சிவன்றாள் வழுத்தித்—தொழாதுதொழும்
திண்மை நழுவாதுட் சேர்மோன மேயியல்பாம்
உண்மை வழிபா டுணர். ௨

793. யானுய பொய்ம்முதலா ரென்றுசா அய் யானற்ற
தானுய வீசன்மெய்த் தத்துவத்தே—தானே
மரணமா யொன்று மவுனநிலை மாண்பே
சரணு கதிதன்மச் சால்பு. ௩

794. பழவினைப் பாங்கே பரனூட்டு விப்பான்
கிழவினை யஃது கெடவே—பழவினையால்
ஊனமாஞ் செய்ம்முயற்சி யூறுகளு மூதியமாம்
மோனமா நிற்கை முறை. ௪

795. எல்லாஞ்செய் வல்ல விறைபதிக் கேறுமா
றெல்லாந் செய்ய வொருவர்க்கும்—பொல்லாத
ஊன்மா மாய வுளக்கவலே யோய்ந்தடிக்கே
மோனமாய் நிற்கை முறை. ரு

796. மற்றவற்றைச் சுட்டி மதித்துப் புறம்போகா
துற்றதன் னுண்மைநிலே யோர்ந்துளத்து—நிற்றலால்
நானென்னும் போத நழுவப் பிறங்குசுத்த
மோனமே ஞான முடிபு. சு

797. கனுமகன்கட் கண்டவிவ காரநகை யாகி
நனுமகனுட் டத்துநலிந் தாற்போற்—றுனுதிடத்துக்
கற்பிதமாஞ் சீவவிவ காரமுந்தற் போதத்துத்
தப்புதலா லெல்லாஞ் சழக்கு. எ

798. அலேயுமன நீரி லகந்தையாஞ் சுவையை
அலேவதனே மாற்றுமுறை யாயின்—நிலேநழுவத்
தானதனே நோக்காது தன்னேயே தான்குறித்து
மோனமுற நிற்கை முறை. அ

799. தள்ளரிய சங்கற்ப ஜாலங் களேயெல்லாம்
தள்ளியகங் காரமுளஞ் சாருங்கால்—உள்ளொளிரும்
பூன்றசொரூ பாகார போதமா மோனமே
ஆன்றபரா வர்க்கென் றறி. கூ

800. உள்ளெழுசங் கற்பமா மோசை யடங்கினலால்
விள்ளரிய மோனநிலே விள்ளாதே—உள்ளே
விருத்திபடங் குற்ருேர் வியன்போர்க் களத்தும்
உாத்தமுழு மோனம் விடார். கo

801. ஊனமா மூத்லுத யுடல்கூந்தை யோய்ந்துள்ளுஞ்சேர்
மோனமா முண்மை முடிவுஞ்சார்—ஞான
சுயரூராய் விலார்மேற்கொள் சொன்மோனஞ் சித்த
வியாபார மன்றோ விளம்பு. கக

802. ஜாதிமத மோகச் சடங்கா யிரந்தாலும்
பேதமதி சற்றும் பெய்ருமோ—ஓதுமதீ
தாதிமத மோன வருள்வாழ் வுளம்பற்றிப்
போதமுதி யாத பொழுது. கஉ

803. புன்மாய மோகப் புலவிடய வேட்கையாம்
உன்மாத முற்று மொழிந்துபோய்த்—தன்மூலத்
தாழ்வா லகந்தையறி வற்றொளிர்மெய்ஞ் ஞானன்ம
வாழ்வே மனோரம் மியம். கங

—:o:—

சுரு. பராபத்தித்திறன்

804. குற்றங் குறையொன்றுங் கூறிக் கொளவுளத்துட்
சற்றுமிட மற்றவுப சாந்தமே—முற்றிலுந்தாம்
தம்மைச் சிவபதத்திற் றன்மயமா யர்ப்பித்த
செம்மையுறு பத்தித் திறம். க

805. இறைவ னருளுக் கிலக்காகி யின்ப
நிறைவுண்மை நின்றொளிரு நெஞ்சத்—துறுமோ
அறியாமை யாமூ ணகந்தை யறிவின்
குறியா மனப்புன் குறை. உ

806. வேறுநினை வுள்ளத் தோவுமட்டே தன்னினைவாற்
றேற்றுமிறை தன்னினைவு சேர்தலாம்—வேற்று
நினைவழிவா வந்த நினைவுமழி வேமெய்ந்
நினைவா நினையா நினைவு. ௩

807. துன்றுநினை வொன்றுமறச் சும்மா விருப்பைநினை
வென்றவழக் கென்னை யியம்புகெனின்—என்றும்
மறப்பிலா வுண்மை மயமா முணர்ச்சித்
திறத்தினா லென்றே தெளி. ௪

808. களங்கறு தும்பு மாயக் கருத்தழிந்து வான்போல்
உளந்திறந்து பொங்கு மொளியாற்—றெளிந்த
உபசாந்த முற்றவிட்டத் துட்சுரக்கு மன்பே
சிவமார்ந்த மெய்ப்பத் திமை. ௫

—:o:—

## ௪௯. ஞானசித்தித்திறன்

809. சித்திகள்பல் வேறாகச் செப்பினுமப் பல்வேறு
சித்திகட்கு ஞானமே சென்னியாம்—சித்திகளுள்
ஏனையபெற் றார்ஞான மிச்சிப்ப ரிச்சியார்
ஞானமுற்றா ரேனையவை நாடு. ௧

810. ஆன்ம சொரூபசித்த ரான்றசித்தி யவ்வொன்றால்
ஏனையவை யாவுமொருங் கெய்தினரே—ஆனவெலாம்
விண்ணுளகி லம்போல் வியத்தா வியத்தமாய்
நண்ணுறனா னான்மசித்தர் மாட்டு. ௨

—:o:—

## ரு0. பிரமத்திறன்

811. மும்முதலு யாமெய்ம் முழுமுதலை யன்றியிலார்
அம்முகா சிற்சத்தி யாங்குடிலை—அம்மறிதம்
சூதாடு தற்கச் சுகமோன மெய்ம்முதலே
ஆதார மாகு மரங்கு. க

812. படரும் படம்பலவும் பார்ப்பாரேன் மூலப்
படராப் படமொன்றைப் பாரார்—படராப்
படமொன்றைப் பார்ப்பார் படஞ்சிலவும் பாரார்
இடமொன் றரங்கியற்கை யீது. உ

813. படராப் படமன்றிப் பார்வைக் களத்திற்
படரும் படமொன்று மில்லை—படத்திற்
படரும் படமன்றிப் பார்க்குங்கா லந்தப்
படராப் படமொன்றும் வேறு. ௩

814. படராத மூலப் படமே பிரம்மம்
படராத வந்தப் படத்திற்—படரும்
படங்களே ஜீவேச் சுரஜகங்கள் பார்ப்ப
அடங்கலுமே மாயை யறி. ச

815. படரும் படமான ஜீவனே தன்போற்
படரும் படஜீவ ரோடு—படரும்
படஜகத்தை யன்றிப் படேச்சுரரை யெண்ணிப்
படஜகத்தி லேங்கு பவன். ரு

816. படர்ந்த மூலப் பீடமான் றன்னைப்
படரும் பட்டமாக வெண்ணிப்—படருழக்கும்
சித்த விருத்தி செறிந் தடங்கி மோனநிலை
முற்ற விருக்கை முறை. ௬௨

———:o:———

௫க. முத்தியுருத்திறன்

817. கட்டுண்டேன் யாரெனத்தற் காணுங் கருத்திடைப்பக்
கட்டெண்ண முற்றுங் கழல்வதாற்—கட்டின்
உயலெணமுந் தீர்ந்துள்ளத் தெஞ்சியதன் னுண்மை
இயலுணர்வ தேவீட் டியல்பு. க

818. யாவுமே தோற்று மிடமறிவாந் தன்னைத்தான்
ஆய்வுமே விட்ட வமைதியிலே—சோர்வுமே
விட்டு நிலைகலக்க மெய்தாமே யாவையுந்தான்
விட்டு விடுதலே வீடு. உ

819. சுட்டறிவு முற்றுந் தொலைந்தாலல் லாதுயிரைக்
கட்டுபுலக் கட்டுலகக் கட்டறார்—நிட்டையாம்
ஆன்மநிலை நிற்றலா லவ்வறிவு பொன்றலே
தான்மகிழு முத்தித் தரம். ௩

820. நகைப்புக் கிடனாக நண்ணும் பிறவித்
தகைப்புக்குத் தாயாகி நின்ற—பகைப்பற்
றறுமா றறிந்தந்தப் பற்றறவைப் பற்றி
வெறுமே யிருத்தலே வீடு. ௪

821. உளதாதன் மாத்திரமும் போங்குறளைத் தண்டித்
தெளிவாய வாழ்க்கைத் திறலே—ஒளியனும்
பரஞான முத்திப் பதமென்றலேதுச்
சிர்மாமெய் கண்டார் திடம். ரு

—:o:—

## ௫உ. பரமார்த்தத்திறன்

822. ஆதலிலை யல்லா வழிவுமிலை பெத்தரிலை
சாதனைகள் செய்வாருஞ் சற்றுமிலை—மேதகவை
வெஃகுவார் தாமில்லை வீடுற்றார் தாமுமிலை
இஃதே பரமார்த்த மெண். க

(குறள் வெண்பா)

(21) ஆதலழி வார்ப்பவிழ வார்சைமுயல் வார்நூரில்
ஈதுபர மார்த்தமென் றெண். உ

—பகவான்

(நேரிசை வெண்பா)

823. உள்ளதையின் றாக்க வுளதாக்க வில்லதனைக்
கள்ளந் தனிலே கடவதலாற்—றெள்ளிதாம்
உண்மை தனிலே யொருமையா லுண்மையாம்
திண்மை தனிலனைத்துஞ் சித்து. ௩

824. நெல்லுமியி னீங்கரிசி நேர்பாச பந்தமது
புல்லுமுயி ராய்ப்பந்தம் போய்ப்பரமாய்ச்—சொல்லும்
உயிர்பரமெல் லாமவ் வுணர்வுருவான் மாவிற்
செயிர்மனத்தின் கற்பனையாத் தேர். ௪

—:o:—

## ௫௩. செம்பொருட்டிறன்

825. ஏதேனு ளதாக வெண்ணுதியோ சிந்தையினவ்
வேதேது முண்மையிலே யில்லதாம்—யாதொன்
றுளதாமே யன்றி யிலதாயோ வுன்னுட்
கொளல்வாரா தஃதே யுளது. ௧

826. இருப்பதா யில்லதா யெண்ணுதது சும்மா
இருப்பதா யுள்ளத் தியானென்—றுருப்பெயர்போய்த்
தன்மயமா யேது தயங்குமோ சந்ததமச்
சின்மயமே செம்பொருளாந் தேர். ௨

827. ஆறு பொருள்க ளநாதியெனச் சொல்பவற்றுள்
ஈறிலதவ் வத்துவித வேகமே—வேறியலும்
ஐந்து பொருள்களுமோ வந்து முடையனவே
சிந்தை யுறநீ தெளி. ௩

828. உண்மை யெனப்படுவ தொன்றே யுணருங்காற்
றிண்மைசே ரந்தமுழுச் செம்பொருளே—நுண்மதியால்
மெல்லவுளம் புக்குணர்ந்த விப்பிரராற் பல்படியாச்
சொல்லப் படலாந் துணி. ௪

829. எத்தனையோ சாலப் பலவா வியங்குமதம்
அத்தனைக்கு முத்தமமா மத்துவிதத்—தத்துவந்தான்
பேதமத பீஜப்பாழ்ம் பேயகந்தை போயொழிந்த
போதமய மோனப் பொருள். ௫

830. ஆதியோ டந்தமிலா யேதாய் விகாரத்தே தான்
டேதுவுப மந்தானு மின்றிகிச் சூதுளாம்
ஜீவபோ தத்தாற் றிகழ்விலதாஞ் செழ்பேர் ருளைத்
தேர்வார் தாஞ் சேர்வர் சிறப்பு. ௬

——:o:——

## ௫௪. பாவனாதீதத்திறன்

831. சற்பனையா முப்புடிபோய்த் தாக்கற்ற தன்மயமாய்
விற்பனர்தந் நெஞ்சில் விளங்கலலாற்—கற்பனையாம்
பொய்த்துவிதப் புன்புலம்போற் புந்தியர் லெண்ணுறுவார்க்
கத்துவித மாட்சி யரிது. ௧

832. சிந்தையிறந் துள்ளுணர்வாற் சிந்தைமூ லஞ்செறிந்த
சிந்தையரா னிச்சிந்த தீரரலாற்—சிந்தைசேர்
புந்தியார் தேறார்மெய்ப் போத சொரூபமாம்
சிந்தை யிலாத சிவம். ௨

833. அத்துவிதச் சீர்மைக் கதிமோக வேகத்தோய்
சித்தவுப சாந்தி செறிந்துண்மை—வத்துநிலை
நிற்போர்க்கே யத்துவித நேர்மெய் நிலைதனுருப்
பிற்போக்கர்க் கென்னடபயன் பேசு. ௩

——:o:——

## ௫௫. அநுபவமுரைத்ததிறன்

834. ஆசா னுரையி னநுபவத்தை யோதுங்காற்
பாசா டவியாகப் பார்த்தவெலாம்—பேசாத
மெய்ஞ்ஞான மோன வெளியன்றி வேறில்லை
கைஞ்ஞான மெல்லாங் கனா. ௧

835. முட்போது மூவிடமும் முப்புடியு மென்பவைகள்
அப்பேற்று காண்டீர் தார்மாற்—றப்பாத
ஆரணத்து மெய்ப்பொருளோர் வாங்கொளிருஞ் சின்மயமாம்
பூரணத்திற் புக்கிருக்கும் போது. ௨

(இன்னிசை வெண்பா)

836. என்னுடைய திட்டியிலே யானன்றி நீயில்லை
நின்னுடைய திட்டியிலே நீயன்றி யானில்லை
தன்னுடைய திட்டியிலே தானன்றி மற்றில்லை
எண்ணுங்கா லவ்வனைத்தும் யான். ௩

(நேரிசை வெண்பா)

837. பூண்டதுபோன் மாயை புலம்பியவென் சுட்டறிவுக்
கீண்டுகுரு வாய்த்தா னெதிர்தோன்றி—ஆண்டதனாற்
போலச் சுடர்விடுமென் பூரணன் மாவுக்கே
சாலத் தகுவர் தனம். ௪

838. சிவமாம் பரபூரண சிற்சத்திக் கன்றி
அவமாஞ் சகமாயா சத்திக்—கெவமாரும்
முட்டுப்பா டுற்ற முகாந்தரங்கொண் டென்றாந்தான்
கட்டுப் படான்முருகன் காண். ௫

——:o:——

௫௬. சமநிலைத்திறன்

839. ஆதியற மாயனா னன்மநிட் டாபரர்க்குச்
சாதி குலஞ்சமயஞ் சற்றமிலை—ஏதில்
உடம்பாய பொய்க்கன்றி யுண்மையா மான்மா
விடம்பாகு பாடொன் றிலை. ௧

840. ஒரு மனைத்துளுந் தானின்றே பொருளாகச்
சாருஞ் சமங்காண் டரிசனமீ—கூறும்
சமரசமெய்ஞ் ஞானச் சதுரர்மீக் கூறும்
சமதர் சனமென் றறி. ௨

841. அகந்தை யழிந்தவச லான்மா நுபூதி
நிகழ்ந்தவுப சாந்த நிறைந்தோன்—உகந்து
புகழ்ச்சியா லின்புறாப் புந்தியான் மாழ்கல்
இகழ்ச்சியா லென்று மிலன். ௩

842. கோழ்வெயிலிற் றெண்ணீர்க் குலாப்போ லியத்தப்
பாழ்வயிற்றூன் றோன்றிப் பசப்புலகத்—தாழ்வயத்தாம்
வாழ்வைப் பொருளா மயங்கார்மெய்ஞ் ஞானிக்குத்
தாழ்வும் பெருமிதமே தான். ௪

843. காமியக்கோ ரிக்கை கழல்கடவுண் மாமுனிவர்
தாமியல்பா யாற்றுந் தவமனைத்தும்—காமர்
சுபயோகந் தான்விளைத்துத் தொல்லுலக மக்கட்
குபயோக மாகு முணர். ௫



## வாழ்த்து

844. வாழி யருணகிரி வாழி ரமணகுரு
வாழி யொருமொழியின் வாழடியார்—-வாழி
குருமூர்த்தி வாசகநற் கோவையா மிந்தப்
பரமார்த்த தீபம் பலித்து.



# அநுபந்தம்

க. சத்திசாந்தித்திறன்

(குறள் வெண்பா)

(22) *சாந்தியதே யுண்ணேக்கிற் சத்தி
புறநோக்கால்
ஆய்ந்தறிவார்க் கொன்றா மவை.
—பகவான்

——:o:——

உ. உலகுண்மைத்திறன்

(நேரிசை வெண்பா)

845. †மூவே ழுலகு முதற்கா ரணநோக்க
ஓவா துளவாற்றா லுண்மையாம்—தாவாத
காரியமாம் பேருருவங் காணுங்காற் காரணமும்
பூரணமாஞ் சூனியமே போன்ம்.

——:o:——

---

* இதனை 141-ஆம் செய்யுளுக்குப்பின் படித்துக்கொள்க.
† இதனை 10-ஆம் செய்யுளுக்குப்பின் படித்துக்கொள்க.

### ௩. நாத்திகத்திறன்

846.* தன்னை யசத்தாகத் தடுமாறு வானன்றே
நின்னையசத் தாக நிகழ்த்துவான்—தன்னதுமெய்
உள்ளபடி யோர்வானவ் வுண்மையே யாமுன்னை
யள்ளலெவன் சூனியநீ யென்று.

——:o:——

### ௪. சோர்க்கநரகத்திறன்

847. சொர்க்கமுத லாகச் சொலுமுலக வுண்மைதனைத்
தர்க்கமிட வேண்டா தமக்குள்ளே—மக்காள்
எதுகாறு மிவ்வுலக மெத்துணைமெய் சொர்க்கம்
அதுகாறு மத்துணைமெய் யாம். ௧

848. இந்த வுடலுலக மெல்லாமிவ் வாறுளதாப்
புந்தியுற வாய்ந்த புலவோர்தாம்—எந்தமோ
டாய்ந்தா லமரா காதியுல கெல்லாமெய்
வாய்ந்தா லெனவேசொல் வாம். ௨

——:o:——

### ௫. நரகஜயத்திறன்
(கலிவிருத்தம்)

849. நரகனை மாய்த்தன னாரண னென்பர்
நரகுட னுறை நடப்போ னரகன்
நரக னெவனென நாடித் தொலைத்தோர்
நரகனை மாய்ந்தவந் நாரண னாரே. ௧

---

* கடவுள் இல்லை யென்னும் நிரீசுவரவாதியின் கொள்கையைப்பற்றி ஈசுவரனை முன்னிலைப்படுத்திக் கூறியது இது. அசத்து- இல்லாதது. மெய் - உண்மை. தான் இருப்பதாக உணரும் ஒருவன் அவ்விருத்தலாகிய உண்மையினின்றும் வேறல்லாத கடவுளை இல்லாதென்று கூறுதல் என் என்றபடி.

850. நரக னுறைபுல நாடி நீங்குந்
நரகனை மாய்த்துமெய்ஞ் ஞானதீ ராடல்
நரக ஜயத்துக் கறிகுறி யான
நரக சதுர்த்தசி நானம தாமே. உ

(23) நரகுட னை நரகுல காளும்
நரகனெனங் கென்றுசா அய் ஞானத் திகிரியால்
நரகனைக் கொன்றுவ னரண னன்றே
நரக சதுர்த்தசி நற்றின மாமே. ௩

—பகவான்.

(நேரிசை வெண்பா)

851. ஊனென் றுட லுருவா மூத்தை நரகத்தை
நானென் றழிந்த நரகனைத்—நானுசா அய்
ஆபாதஞ் செற்றொளிர்பே ரான்ம சதோதயமே
தீபா வளியாத் தெளி. ௪

(24) நரக வுருவா நடலை யுடல
கிரக மகமெனவே கெட்ட—நரகனும்
மாபா வியைநாடி மாய்த்துத்தா னொளிர்தல்
தீபா வளியாந் தெளி. ௫

—பகவான்

—:o:—

௯. கோசக்கழற்சித்திறன்.

852. நானென் பதனையக நாட்டத்தாற் றனல்லா
தான்வன்ன கோசமுத லந்தனுளும்—தானனுக
ஒண்ணு தொழித்தமைந்த வுள்ளத் தெளிவினின்றே
உண்மைக் கவித்துவமுண் டாம்.

—:o:—

௨

## குருவாசகக்கோவை

## செய்யுள் முதற்குறிப் பகராதி

[எண் - பக்க எண்]



குறிப்பு:—பகவான் பாட்டுக்களின் முதற் குறிப்புக்கள் பெரிய எழுத்தில் அமைக்கப்பெற்றுள்ளன.